A T A

# ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை

# வளர்நிலை-2

## தமிழ்ப் பாடநூல்

ஆஸ்திரேலிய விக்டோரிய அவசியக் கல்வித்திட்ட வரையறைக்குட்பட்டது.

ழ

அயலகத் தமிழர்களுக்கான
மரபுசார் தமிழ்க்கல்வி

AUSTRALIAN TAMIL ACADEMY




Culture Based Tamil Education© for Diaspora

Australian Victorian Essential Learning Standards (AusVELS)



"என்னை ஈன்று அமுதூட்டிய அன்னை
விரல்பிடித்து வழிகாட்டியத் தந்தை
அறிவூட்டி, நெறிபடுத்திய ஆசான்
பாதங்களுக்குச் சமர்ப்பணம்"

*நாகை. கா. சுகுமாரன்*

# தமிழ்ப் பாடநூல் - வளர்நிலை 2




**ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை**

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

## நன்றிக்குரியவர்கள்

திரு. தமிழருவி மணியன், தலைவர், காந்திய மக்கள் இயக்கம்.
முனைவர் மு. பொன்னவைக்கோ, துணைவேந்தர், SRM பல்கலைக்கழகம்.
முனைவர் ப. அர. நக்கீரன், இயக்குனர், தமிழ் இணையக் கல்விக்கழகம்.
திரு. இல. சுந்தரம், துணைப்பேராசிரியர், SRM பல்கலைக்கழகம்.
தமிழுக்குத் தொண்டாற்றியத் தரணிவாழ்த் தமிழார்வலர்கள்.
புத்தக ஆக்கத்திற்கு ஊக்கமளித்தத் தோழர்கள், உறவினர்கள்.
அழகுற அச்சுப்பதித்த அச்சகத்தார்.

மரபுசார் தமிழ்க் கல்வி
பதிப்புரிமை : மைக்குறி வெளியீடு (Inkmark Publications, Australia)
முதற்பதிப்பு - 2014
ISBN 978-0-9942062-0-6
நூலாக்கம் : நாகை. கா. சுகுமாரன்
தலைவர்
வள்ளுவர் அறக்கட்டளை
ஆஸ்திரேலியா

கணினி வடிவமைப்பு: நாகை. கா. சுகுமாரன்

ஆலோசனை : திருமதி ஜெகதீஸ்வரி காளிமுத்து, Dr. புவனேஸ்வரி சுகுமாரன், திருமதி கமலவல்லி சுகுமாரன், திருமதி கற்பகவல்லி சுரேஷ், திரு கார்த்திகேயன் சுகுமாரன், ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலையின் நிர்வாகக் குழு மற்றும் ஆசிரியர்கள் குழு.

## தமிழ்த்தாய் வாழ்த்து



நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெரும் தமிழணங்கே!
தமிழணங்கே!

உன் சீரிளமைத் திறம்வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!



மனோன்மணீயம் பெ. சுந்தரனார்.

## இன்பத்தமிழ்

தமிழுக்கும் அமுதென்று பேர் ! அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர் !
தமிழுக்கு நிலவென்றுபேர் ! இன்பத்
தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர் !
தமிழுக்கு மணமென்று பேர் ! இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர் !
தமிழுக்கு மதுவென்று பேர் ! இன்பத்
தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர் !

தமிழ் எங்கள் இளமைக்கு பால் ! இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல் !
தமிழ் எங்கள் உயர்வுக்கு வான் ! இன்பத்
தமிழ் எங்கள் அசதிக்குச் சுடர்தந்த தேன் !
தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள் ! இன்பத்
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள் !
தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய் ! இன்பத்
தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்ற தீ !



புரட்சிக்கவி பாரதிதாசன்

# நோக்கம்

நல்ல நிலத்தில் விதைக்கப்பட்ட விதையைப் பேணி பாதுகாத்தால் அது செழிப்பாக வளர்ந்து சிறந்த பயனைத் தரும் என்பது கண்கூடு.

சிறந்த கல்விச் சாலை தான் ஒரு சமுதாயத்தைச் செழிப்படைய வைக்கின்ற நிலமாக இருக்கிறது. அந்தக் கல்விச் சாலையில் வழங்கப்படும் கல்வியானது, செடிக்கு நாம் இடுகின்ற இயற்கை உரம் போல அமையவேண்டும்.

மரபு சார் தமிழ்க் கல்வித்திட்டத்தின் கீழ் வடிவமைக்கப்பட்டுள்ள இந்தப் புத்தகங்கள் அனைத்தும் மாணவ விதைகளைச் செழிப்பாக வளரவைக்கும் மிகச்சிறந்த உரம் என்பதில் ஐயமில்லை. ஆதாரக்கல்வி, வளர்நிலை 1 ஆகிய இரண்டு புத்தகங்களையும் பயின்று வந்த மாணவர்களின் தமிழறிவு ஓங்கி வளர்வதே இதற்குச் சான்று.

இதைக் கண்ணுறும்போது, விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்ற சொலவடை நினைவுக்கு வருகிறது.

அயலகத்தில் வசிக்கும் குழந்தைகளின் வளரும் சூழலைக் கருத்தில் கொண்டு, குறுகிய நேரத்தில் நமது பண்பாட்டை விரைவாகக் கற்றுத் தெளிய இந்தப் புத்தகம் வழிகாட்டுகிறது.

தமிழ் மொழி இயற்கையுடன் இணைந்து தோன்றி வளர்ந்த மொழி என்பதை அதன் ஒலி வடிவத்திலிருந்து எல்லோரும் அறிவர். தமிழ் இலக்கியங்களின் அழகும், இலக்கணத்தின் கட்டமைப்பும் அதைத்தெளிவாகவே நமக்கு உணர்த்துகின்றது.

நம்முடைய குழந்தைகளின் வாழ்க்கை மேம்பாட்டிற்குத் தமிழ் மொழி ஓர் இயற்கை உரமாக அமைந்திருக்கிறது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

குறிப்பாக நாம் வடிவமைத்துள்ள மரபு சார் தமிழ்க் கல்வித் திட்டத்தில் நல்லொழுக்க வழிகாட்டலும், நம் பண்பாட்டு விழுமியக் குறிப்புகளும் பிணைந்துள்ளதால் ஒழுக்கமான சமுதாயத்தைப் படைக்க இந்தப் பாடங்கள் ஒரு சிறந்த அடித்தளமாக அமைகிறது.

இக்கல்வித்திட்டத்தின் மூலமாக அன்பு, உடல்நலம், தன்னொழுக்கம், சுற்றுப்புறச் சூழ்நிலையில் அக்கறை, மனிதநேயம், நாட்டுப்பற்று, குடும்பப் பற்று ஆகியவற்றைப் பற்றி தாய்மொழி வழியாக எளிதில் கற்றறியும் வகையில் பாடங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

AusVELS *(Australian/Victorian Essential Learning Standards)* எனப்படும் ஆஸ்திரேலிய, விக்டோரிய அவசியக் கல்வித்திட்ட வரையறைக்கு உட்பட்டுப் பாடங்கள் தொகுக்கப் பட்டுள்ளன.

உங்கள் கரங்களில் தவழும் வளர்நிலை2 என்ற இந்தத் தமிழ்ப் பாடப்புத்தகம் தமிழையும், தமிழரின் பண்பாட்டையும் எளிய முறையில் உங்கள் குழந்தைகளுக்கு சொல்லுகிறது.

குறைந்தபட்சம் வாரத்திற்கு இரண்டு நாட்களாவது நீங்களும், உங்கள் குழந்தையும் இந்தப் புத்தகத்துடன் இணைந்து இருந்தால் உங்கள் குழந்தை சிறந்த தமிழறிஞராக மலர்வார் என்பதில் ஐயமேதும் இல்லை.

எங்கள் நோக்கமும் அதுதான்.

நன்றி

நாகை. கா. சுகுமாரன்
நிறுவனர்
வள்ளுவர் அறக்கட்டளை, ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை.
web: www.valluvarfoundation.org - www.australiantamilacademy.org
email: valluvarfoundation@gmail.com - info@australiantamilacademy.org
+61 434 013 993

# தமிழ்ப் பாடநூல் - வளர்நிலை 2

## மாணாக்கர் உறுதி மொழி

என் பெற்றோரைப் பெரிதும் போற்றி வாழ்ந்திடுவேன்.
என் தாய் மொழியை மறக்கமாட்டேன்.
என் ஆசிரியரை மதித்து நடப்பேன்.
கல்விதான் உலகில் சிறந்தது.
கல்விதான் என்னுடைய சக்தி.
நான் கற்ற செம்மொழித்தமிழை
மற்றவருக்குச் சொல்லிக் கொடுப்பேன்.
செம்மொழித்தமிழையும், தாய் நாட்டையும்,
இயற்கையையும் மதித்து நடப்பேன்.
குடும்பப்பற்று, நாட்டுப்பற்று, உண்மை, உழைப்பு,
உதவி, நேர்மை இவைகளைக் கடைபிடிப்பேன் என்று
நான் உறுதி கூறுகிறேன்.




என் பெயர்: ____________________

செல்லப் பெயர்: ____________________

வகுப்பு: ____________________

# பொருளடக்கம்

# ஆசிரியரே! உங்களுடன் ஒரு நிமிடம்!

தமிழின் மாண்பை மாணவர்களின் மனதில் விதைக்கும் வித்தகர் நீங்கள். உலகின் தலை சிறந்த மொழியை அடுத்த தலைமுறைக்கு அறிமுகப்படுத்துகிறீர்கள். உங்களுடைய பணி மகத்தானது, வணங்குகிறேன்.

சிறந்த தமிழ் அறிஞர்களை உருவாக்கி வரும் உங்களுடைய சீரிய பணியைச் சிறப்புடன் செய்வதற்கு உதவுவது என் கடமை.

மரபு சார் தமிழ்க்கல்வியின் வளர்நிலை 2 என்னும் தமிழ் பாட நூல் இப்பொழுது உங்கள் கைகளில் தவழ்கிறது. இந்தப் புத்தகத்தில் உள்ளவற்றைப் பற்றியும், அவற்றைக் கற்பிக்கும் முறையைப் பற்றியும் உங்களுக்கு விளக்குகிறேன்.

இப்புத்தகத்தில் இடம்பெற்றுள்ள பாடங்கள், மரபுசார் தமிழ்க் கல்வித்திட்டத்தின் (Culture Based Tamil Education) மொழி விழிப்புணர்வை (Language Awareness – Explicit knowledge about a language and its sensitivity) கருத்தில் கொண்டு எழுதப்பட்டவை.

உள்மனப் பயிலல் (Language Immersion – Learning unconsciously) முறையில் தமிழ் இலக்கணத்தைக் கற்றுக் கொள்ளும் வகையில், ஒவ்வொரு பாடத்தையும் எழுதி இருக்கிறேன். எனவே நீங்கள் ஆங்கிலச் சொற்களை வகுப்பில் பயன்படுத்தக்கூடாது.

ஆரம்பத்தில் சில வகுப்புகள் வரை மாணவர்கள் புரிந்து கொள்வதற்குச் சிரமப்படுவது போல் தோன்றலாம். ஆனால், வெகு விரைவில் கற்றுக் கொள்வார்கள்.

அரிச்சுவடியின் அகர வரிசைமுதல் ஔகார வரிசை வரை உள்ள 24 பக்கங்களில் எழுத்துகள் உருவாகும் முறையும், நூற்றுக் கணக்கான சொற்களும், சொற்களை விளக்கும் படங்களும், நூற்றுக்கு மேற்பட்ட சொற்றொடர்களும், இரண்டு சம்பவங்களும் இடம்பெற்றுள்ளன.

இதிலுள்ள ஒவ்வொரு சொல்லையும், சொற்றொடரையும் கற்பிக்கும்போது அதைப் பற்றிய 'சொல், பொருள்' வரலாற்றை மாணவர்களுக்கு விளக்கவேண்டியது அவசியம்.

இந்தச் சொற்களும், சொற்றொடரும் நா பயிற்சிக்கு இன்றியமையாதவை. அதுமட்டுமல்ல, அடுத்து வருகின்ற பாடங்களைப் பயில்வதற்கு இவை அடித்தளமாக அமைகின்றன. அதனால், இவற்றைப் பலமுறை வாசிக்கச் சொல்லியும் எழுதச் சொல்லியும் பயிற்சியளிக்க வேண்டும்.

பாடங்கள் அனைத்தையும் மனப்பாடமாகச் சொல்ல மாணவர்களுக்குத் தெரியவேண்டும். நம் வாழ்க்கையில் அன்றாடம் பயன்படுத்துகிற சொற்களைக் கொண்ட சொற்றொடர்களுக்கும், நிகழ்வுகளுக்கும் இப்புத்தகத்தில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

குறிப்பாக உணவு, உடை, உறைவிடம் ஆகிய பாடங்களில் இடம் பெற்றுள்ள சொற்களையும், வாக்கியங்களையும் தெளிவாகப் பேசவும் எழுதவும், தக்க நேரத்தில் பயன்படுத்தவும் சொல்லிக்கொடுங்கள்.

இப்புத்தகத்திலுள்ள, 'கதைக் கதையாம் காரணமாம்' என்ற நமது பாரம்பரியப் பாடலானது, புளூம்ஸ் பகுப்பியல் முறைக்கு (Blooms Taxonomy – A classification of learning objective that provides a structured questioning method to help create more focused lesson plans) சிறந்த உதாரணம்.

இயன்றவரை எல்லாப் பாடங்களையும் இவ்வகையில் சொல்லிக் கொடுக்கலாம். இது ஒரு மொழியை வெகு விரைவாகக் கற்பிக்கும் மேம்பட்ட முறையாகும் (Advanced language teaching Methodology).

இந்த நூலை மாணவர்களுக்குக் கற்பிக்கும் முன் ஆதாரக்கல்வி, வளர்நிலை-1, ஆகிய இரண்டு புத்தகங்களையும் உங்கள் கவனத்தில் கொள்வது நல்லது. ஏனெனில், மரபுசார் தமிழ்க் கல்வித்திட்டத்தில் உருவாகி வருகின்ற 24 புத்தகங்களும் ஒன்றுக்கு ஒன்று அடித்தளமாக இருக்கின்றன.

இந்த ஆண்டின் இறுதியில் இப்புத்தகத்தை முழுவதுமாகப் படிக்கவும் எழுதவும் உங்கள் மாணவருக்குத் தெரிந்திருந்தால், சிறந்ததொரு தமிழ் அறிஞரை உருவாக்க நீங்கள் அடித்தளம் அமைத்துள்ளீர் என்று பொருள்.

அதுதான் நம்முடைய இலக்கு.

நன்றி

நாகை. கா. சுகுமாரன்
நிறுவனர்
வள்ளுவர் அறக்கட்டளை, ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை.
web: www.valluvarfoundation.org - www.australiantamilacademy.org
email: valluvarfoundation@gmail.com - info@australiantamilacademy.org
+61 434 013 993

# வணக்கம் தமிழரின் மரபு


ஓவியம்: நன்றி திருமதி மனோ சாமிநாதன்

ஒருவர் மற்றொருவரை சந்திக்கும்போது வணக்கம் என்று கூறுவது தமிழரின் மரபாகும்.

வணக்கம் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. தொழுதல், அன்பொழுகல், போற்றுதல், வாழ்த்துதல், வரவேற்றல், நன்றி கூறல் போன்ற பல செயல்களுக்கு ஏற்றப் பொருளை வணக்கம் என்ற சொல் உணர்த்துகிறது.

எல்லா காலத்திலும், எந்த சூழ்நிலையிலும் பயன்படுத்தக்கூடிய ஒரு சொல் வணக்கம்.

மாணாக்கர் ஆசிரியரை வணங்குவது தனக்குக் கல்வி கற்றுக்கொடுக்கும் ஆசிரியரின் தொண்டுக்கு நன்றி கூறலாகும்.

ஆசிரியர் மாணாக்கரை வணங்குவது மாணவர்மீது அவர் கொண்ட அன்பின் வெளிப்பாடு ஆகும்.

நம்மைவிடப் பெரியவரை வணங்குவது அவரிடம் நாம் கொண்டுள்ள மரியாதையை உணர்த்தும் செயலாகும்.

பெரியவர் நம்மை வணங்குவது நமக்கு நல்லாசி கூறுவதாகும்.

**ஆசிரியர் கவனத்திற்கு:**

ஆண்டின் இரண்டாம் பருவ இறுதியில் மாணவர்கள் பார்த்து எழுதும் பயிற்சியில் தேர்ந்து இருக்கவேண்டும்.
எனவே ஒவ்வொரு வகுப்பிலும் சொற்களை எழுதப்பழக்க வேண்டும்.

**எழுதியும், பேசியும் பழகு:**

ஒருவர்
மற்றொருவர்
தமிழர்
மரபு
சந்திப்பு
வணக்கம்
தொழு
அன்பொழுகு
போற்று
வரவேற்பு
நன்றி கூறு
சூழ்நிலை
மாணாக்கர்
ஆசிரியர்
மரியாதை
நல்லாசி

# தமிழ் எழுத்துக்களின் அட்டவணை

| | | ஆய்த எழுத்து | உயிரெழுத்துகள் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ஃ | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
| 1 | மெய்யெழுத்துகள் | க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| 2 | | ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| 3 | | ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| 4 | | ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| 5 | | ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| 6 | | ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| 7 | | த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| 8 | | ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| 9 | | ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| 10 | | ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| 11 | | ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| 12 | | ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| 13 | | ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| 14 | | வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| 15 | | ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| 16 | | ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| 17 | | ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| 18 | | ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1. வணக்கம் என்றால் என்ன?
2. எப்படி வணங்க வேண்டும்?
3. மாணவர் ஆசிரியரை ஏன் வணங்கவேண்டும்?

### கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. ஆசிரியர் மாணவரை வணங்குவது ________ ________ ஆகும்.
2. பெரியவர் நம்மை வணங்குவது நமக்கு ________ கூறுவதாகும்.

குறளமுதம்:138 அதிகாரம் : ஒழுக்கமுடைமை

**நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்: தீயொழுக்கம்**
**என்றும் இடும்பை தரும்.**

பொருள்:

நல்லொழுக்கம் இன்பமான நல்வாழ்க்கைக்குக் காரணமாக இருக்கும்.
தீயொழுக்கம் எப்போதும் துன்பத்தைக் கொடுக்கும்.

பிரித்து எழுதுக:

நல்வாழ்க்கை - நல்ல + வாழ்க்கை
நல்லொழுக்கம் - நல்ல + ஒழுக்கம்
தீயொழுக்கம் - தீய + ஒழுக்கம்



ஆசிரியர் கவனத்திற்கு:
பேச்சு மற்றும் மனனப் பயிற்சி

மாணவர்களுக்குப் பேசும் பயிற்சியுடன், எழுதும் பயிற்சியும் மிக அவசியம். மாணவர்களைக் குழுக்களாகப் பிரித்து அவர்களுக்குள் கேள்விகளை எழுப்பி பதிலைச் சொல்லவைக்கவேண்டும். பாடத்தில் உள்ளச் சொற்கள் அனைத்தையும் தனியொருத் தாளில் எழுதி அடுத்த வகுப்பில் கொண்டுவரப் பணிக்கவேண்டும். இந்தப் பாடம் முழுவதும் மனனப் பயிற்சிக்கு உட்பட்டது.



# எழுத்துகள்

## உயிர் எழுத்துகள்

தமிழில் உள்ள முப்பது முதல் எழுத்துகளில் தனித்து இயங்கும் பன்னிரெண்டு அடிப்படை எழுத்துகள் உயிர் எழுத்துகள் எனப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
| எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |

## மெய் எழுத்துகள்

தமிழில் உள்ள முப்பது முதல் எழுத்துகளில் புள்ளியுடன் கூடிய பதினெட்டு எழுத்துக்கள் மெய் எழுத்துகள் என்று அழைக்கப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க் | ங் | ச் | ஞ் | ட் | ண் |
| த் | ந் | ப் | ம் | ய் | ர் |
| ல் | வ் | ழ் | ள் | ற் | ன் |

## மூவகை உயிர்மெய் ஒலிகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | ச | ட | த | ப | ற |
| ங | ஞ | ண | ந | ம | ன |
| ய | ர | ல | வ | ழ | ள |

கசடதபற வல்லினமாம்
ஙஞணநமன மெல்லினமாம்
யரலவழள இடையினமாம்
யாவரும் இங்கே ஓரினமாம்

## உயிர்மெய் எழுத்துகள்

அ என்ற உயிரெழுத்து பதினெட்டு மெய்யெழுத்துகளுடன் சேர்ந்து ஒலிப்பதால் பிறக்கும் பதினெட்டு உயிர்மெய் எழுத்துகளின் அட்டவணை:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | ங | ச | ஞ | ட | ண |
| த | ந | ப | ம | ய | ர |
| ல | வ | ழ | ள | ற | ன |

தமிழின் முதலெழுத்துகளான பன்னிரெண்டு உயிர்எழுத்துகளுடன் பதினெட்டு மெய் எழுத்துகளும் சேர்ந்து ஒலிப்பதால் பிறக்கும் இருநூற்றிப்பதினாறு எழுத்துகளும் உயிர்மெய் எழுத்துகள் எனப்படும்.

## ஆய்த எழுத்து

ஆய்த எழுத்து தமிழில் உள்ள ஒரு சிறப்பெழுத்து ஆகும்.



**ஆசிரியர் கவனத்திற்கு:**

அரிச்சுவடி பாடத்தை கடந்த இரண்டு ஆண்டுகளாக மாணவர்கள் கற்றிருப்பார்கள். எனினும் அதை மீண்டும் நினைவூட்டல் மிகவும் அவசியம். எழுதவும் படிக்கவும் பயிற்சியளிக்கவேண்டும்.

## கோடிட்ட இடங்களை நிரப்புக.

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

1. முதல் எழுத்துகள் என்பன __________, __________ ஆகும்.
2. முதலெழுத்துகளை சார்ந்துவரும் எழுத்துகள் __________ எனப்படும்.
3. முதலெழுத்துகளின் எண்ணிக்கை மொத்தம் __________.
4. சார்பெழுத்துகள் மொத்தம் __________.
5. உயிரெழுத்துகள் மொத்தம் _____. அவை __________
6. மெய்யெழுத்துகள் மொத்தம் _____ . அவை __________ __________.
7. மெய்யெழுத்துகள் __________, __________, __________ என மூவகையில் ஒலிக்கும்.
8. வல்லின எழுத்துகள் __________ எனப்படும்.
9. மெல்லின எழுத்துகள் __________ எனப்படும்.
10. இடையின எழுத்துகள் __________ எனப்படும்.
11. வல்லின உயிர்மெய் எழுத்துகள் __________ எனப்படும்.
12. மெல்லின உயிர்மெய் எழுத்துகள் __________ எனப்படும்.
13. இடையின உயிர்மெய் எழுத்துகள் __________ எனப்படும்.
14. தமிழ் எழுத்துகள் மொத்தம் __________ ஆகும் (12, 216, 247).
15. உயிர்மெய் எழுத்துகள் மொத்தம் __________ ஆகும் (12, 216, 247).
16. சிறப்பு எழுத்தின் பெயர் __________.

### சான்றோர் கூற்று

சோம்பல் மிகக் கெடுதி பாப்பா, - தாய்
சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா,
சொல்லில் உயர்வு தமிழ் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா



மகாகவி பாரதியார்

தட்டாதே - மறுக்காதே __________    தொழுது - வணங்கி __________

கெட்டவை x நல்லவை __________    சோம்பல் x சுறுசுறுப்பு __________    தாழ்வு x உயர்வு __________

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – அ வரிசை

க் + அ = க

கப்பல்

க

ம் + அ = ம

மரம்

ம

ங் + அ = ங

சங்கு

ங

ய் + அ = ய

முயல்

ய

ச் + அ = ச

சக்கரம்

ச

ர் + அ = ர

கரடி

ர

ஞ் + அ = ஞ

ஞயம்

ஞ

ல் + அ = ல

இலவம்

ல

ட் + அ = ட

படகு

ட

வ் + அ = வ

வயல்

வ

ண் + அ = ண

பணம்

ண

ழ் + அ = ழ

பழம்

ழ

த் + அ = த

தவளை

த

ள் + அ = ள

விளக்கு

ள

ந் + அ = ந

நரி

ந

ற் + அ = ற

பறவை

ற

ப் + அ = ப

பந்து

ப

ன் + அ = ன

அன்னம்

ன

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:




எனக்கு டாஸ்மேனியக் கப்பலில் பயணம் செய்ய விருப்பம். இன்று அந்தக் கப்பல் கப்பல் மெல்பேர்ன் துறைமுகத்திற்கு வந்திருக்கிறது. நாங்கள் எல்லோரும் கடற்கரைக்குச் சென்று அந்தக் கப்பலைப் பார்த்தோம். கடலில் கப்பலுக்குப் பக்கத்தில் சில படகுகளும் இருந்தன.

கப்பல்

நானும், அக்காவும், தம்பியும், தங்கையும் கடற்கரையில் விளையாடினோம். கடற்கரையில் சோழிகளும், சங்குகளும், சிப்பிகளும் கிடந்தன. விளையாடும் பொழுது தம்பி எறிந்த பந்து கடலில் விழுந்தது. அதைப் பார்த்த அக்கா தம்பியைத் திட்டினாள். இனிமையாகப் பேசவேண்டும் (ஞயம்பட உரை), திட்டக் கூடாது என்று அக்காவிடம் அப்பா சொன்னார்.

விளையாடிய பிறகு எல்லோரும் வீட்டிற்குப் புறப்பட்டோம். வீட்டிற்குப் போகும் வழியில் என்னுடைய மிதிவண்டியின் சக்கரத்தில் ஆணி குத்தி விட்டது. அதனால் சக்கரத்தில் இருந்தக் காற்று வெளியேறிவிட்டது. எனவே மிதிவண்டியைத் தள்ளிக்கொண்டே வீட்டிற்கு வந்தோம்.

மாலையில் வனவிலங்குப் பூங்காவிற்குச் சென்றோம். அங்கு நரி, கரடி, முயல் போன்ற மிருகங்களைப் பார்த்தோம். அங்குள்ள ஒரு குளத்தில் தவளை இருந்தது.

இரவு எல்லோரும் வீட்டிற்குத் திரும்பி வந்தோம். வீடு இருட்டாக இருந்ததால் அம்மா விளக்கை ஏற்றினார். அக்கா ஒரு படம் வரைந்தாள். அந்தப் படத்தில் வயலும் இலவ மரமும் அன்னப்பறவையும் இருந்தன. படத்தைப் பார்த்து அப்பாவும் அம்மாவும் பாராட்டினார்கள்.


மிதிவண்டி


இலவம்பஞ்சு


நரி


அன்னம்


படகு


தவளை


மின்விளக்கு


பணம்


சிப்பி


சங்கு


சோழி

### ஆசிரியர் கவனத்திற்கு:

அரிச்சுவடியில் இடம்பெற்ற பெரும்பாலான சொற்களுக்கு ஏற்றப் படங்கள் அதன் பெயருடன் இடம்பெற்றுள்ளன.

அந்தப் பெயர்களை மாணவர்கள் எழுதிப் பழக வேண்டும். எல்லாப் பாடங்களையும் ஒவ்வொரு மாணவரும் தெளிவான உச்சரிப்புடன் வாசித்தல் அவசியம்.

இப்பாடங்கள் அனைத்தையும் கூட்டுப்பயிற்சி முறையில் கற்பிக்கவேண்டும். ஒரு மாணவர் முதல் வரியைச் சொல்ல, அதன் அடுத்த வரியை அடுத்த மாணவர் சொல்லவேண்டும்.

இப்படியாக எல்லா வாக்கியங்களையும் எல்லா மாணவர்களும் தெளிவாக உச்சரிக்கவேண்டும்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஆ வரிசை

க் + ஆ = கா

காசு

கா

ம் + ஆ = மா

மான்

மா

ங் + ஆ =ஙா

ஙா

ய் + ஆ = யா

யானை

யா

ச் + ஆ = சா

சாட்டை

சா

ர் + ஆ = ரா

திராட்சை

ரா

ஞ் + ஆ = ஞா

ஞாயிறு

ஞா

ல் + ஆ = லா

பலா

லா

ட் + ஆ = டா

பட்டாசு

டா

வ் + ஆ = வா

வாழை

வா

ண் + ஆ = ணா

ஓணான்

ணா

ழ் + ஆ = ழா

விழா

ழா

த் + ஆ = தா

தாமரை

தா

ள் + ஆ = ளா

காளான்

ளா

ந் + ஆ = நா

நாய்

நா

ற் + ஆ = றா

புறா

றா

ப் + ஆ = பா

பாம்பு

பா

ன் + ஆ = னா

வினா

னா

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாள். அன்று நாங்கள் ஒரு விழாவிற்குச் சென்றோம். செல்லும் வழியில் ஒரு குளம் இருந்தது.


தாமரைக்குளம்

அந்தக் குளத்தில் தாமரைப் பூக்கள் பூத்திருந்தன. குளத்திற்கு பக்கத்தில் இருந்த வேலியில் ஒரு ஓணான் இருந்தது.

நாங்கள் எல்லோரும் வண்டியை விட்டு இறங்கி நடந்தோம். தரையில் காளான்கள் முளைத்து இருந்தன. வேலி ஓரமாக நடக்கவேண்டாம் என்று அப்பா சொன்னார். ஏனென்றால் அங்கே பாம்புகூட இருக்குமாம். அதனால் நான் அப்பாவுடன் கவனமாக நடந்து சென்றேன்.

விழா முடிந்து வீட்டிற்குத் திரும்பி வரும் வழியில் நிறைய பழங்களை வாங்கினோம். எனக்கு மாம்பழமும், பலாப்பழமும் பிடிக்கும். என் தம்பிக்கு வாழைப்பழமும், திராட்சைப்பழமும் பிடிக்கும்.

வீட்டிற்கு வந்தபிறகு அப்பா அம்மாவிடம் பணத்தைக் கொடுத்தார். அம்மா அதை வாங்கிக்கொண்டு, எங்களுக்கு சில்லறைக் காசுகளைத் தந்தார். அந்தக் காசுகளை உண்டியலில் போட்டு சேமித்தோம்.

சேமித்தப் பணத்தில் நான் பம்பரமும் சாட்டையும் வாங்கினேன். தம்பி பட்டாசுகளை வாங்கினான். எல்லோரும் மகிழ்ச்சியாக பட்டாசுகளை வெடித்து விடுமுறையைக் கொண்டாடினோம்.


ஓணான்


மாங்காய்


வாழைப்பழம்


பலாப்பழம்


திராட்சை


யானை


பாம்பு


பட்டாசு


சாட்டை பம்பரம்


புறா


மான்


காளான்


நாய்


காசு

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – இ வரிசை

க் + இ = கி

கிணறு

கி

ங் + இ = ஙி

ஙி

ச் + இ = சி

சிலை

சி

ஞ் + இ = ஞி

ஞிமிறு

ஞி

ட் + இ = டி

கடிகாரம் - கடியாரம்

டி

ண் + இ = ணி

மணி

ணி

த் + இ = தி

குதிரை

தி

ந் + இ = நி

நிலம்

நி

ப் + இ = பி

பிறை

பி

ம் + இ = மி

மின்னல்

மி

ய் + இ = யி

தயிர்

யி

ர் + இ = ரி

அரிசி

ரி

ல் + இ = லி

பல்லி

லி

வ் + இ = வி

விசிறி

வி

ழ் + இ = ழி

கோழி

ழி

ள் + இ = ளி

பள்ளி

ளி

ற் + இ = றி

பன்றி

றி

ன் + இ = னி

பனி

னி

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:


கிணறு


பல்லி



விசிறி


மின்விசிறி


வண்டு (ஞிமிறு)


பன்றி


கோழி


மணி


கடிகாரம்


அரிசி





பள்ளி


பிறை


மின்னல்


பனி


நிலம்

கிணற்றில் தண்ணீர் இருக்கும்.

பன்றியும், கோழியும் பண்ணையில் வாழும்.


குதிரை

பல்லி சுவரில் ஏறும், குதிரை வேகமாக ஓடும்.

வண்டு ரீங்காரம் செய்யும், கடிகாரம் நேரத்தைக் காட்டும்.

கோயில் மணியோசை கேட்பதற்கு இனிமையாக இருக்கும்.

இந்தப் பாடங்களை தினமும் படிப்பேன், தினமும் எழுதுவேன்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஈ வரிசை

| சொல் | எழுத்து | | சொல் | எழுத்து |
|---|---|---|---|---|
| கீரை | கீ | | மீன் | மீ |
| | ஙீ | | | யீ |
| சீதை | சீ | | வாரீர் | ரீ |
| ஞீலிவனேஸ்வரர் | ஞீ | | கலீர் | லீ |
| கண்டீர் | டீ | | வீடு | வீ |
| தண்ணீர் | ணீ | | வாழீர் | ழீ |
| தீபம் | தீ | | பளீர் | ளீ |
| நீளம் | நீ | | கூறீர் | றீ |
| பீளை | பீ | | பன்னீர் | னீ |

___ + ___ = ___

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:


தீபம்


கீரை


பன்னீர் சொம்பு


ஸ்ரீலிவனேஸ்வரர்


இராமர் சீதை


தண்ணீர்


மீன்


சொம்பு


கொலுசு


சுவர்

### பொருளை அறிக:

கூறீர் - கூறுங்கள்
வாரீர் - வாருங்கள்
வாழீர் வாழுங்கள்
நீடூழி - நீண்ட நாட்கள்
பீளை - கண்ணின் அழுக்கு

பூசை அறையில் தீபம் ஏற்று.

கீரையை தினமும் உண்ண வேண்டும்.

வீட்டைத் தூய்மையாக வைக்கவேண்டும்.

காலில் கொலுசு கலீர் கலீர் என்று ஒலித்தது.

நீளம், அகலம், உயரம் என்பது அளவுகோலாகும்.

வீட்டின் சுவர் பளீரென்று வெண்மையாக இருக்கிறது.

குளத்திலும், ஆற்றிலும், கடலிலும் மீன்கள் வாழ்கின்றன.

இஞ்சி உடம்புக்கு நல்லது. நிறைய தண்ணீர் குடிப்பது அவசியம்.

பார்மீது நான் சாகாதிருப்பேன் கண்டீர், என்று பாரதியார் சொன்னார்.

வாரீர் வாரீர், நீடூழி வாழீர். எல்லோரிடமும் நல்வார்த்தைக் கூறீர்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துக்கள் – உ வரிசை

| | |
|---|---|
| குடம் — கு | முறம் — று |
| ஙு | செய்யுள் — யு |
| சுக்கு — சு | கருடன் — ரு |
| ஞு | சிலுவை — லு |
| எட்டு — டு | உழவு — வு |
| அணு — ணு | கழுகு — ழு |
| துண்டு — து | கொள்ளு — ளு |
| நுங்கு — நு | பொறுமை — று |
| புட்டு — பு | புனுகு — னு |

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:


குடம்


நுங்கு


கொள்ளு


உழவு


சிலுவை


கழுகு


கருடன்


முறம்


புனுகுப் பூனை


நெசவு

குதிரை கொள்ளைத் தின்னும்.

பொறுமை கடலினும் பெரிது.

இயேசு சிலுவையைச் சுமந்தார்.

புனுகு ஒரு வாசனைப் பொருள்.

இடியாப்பமும், புட்டும் சுவையான உணவு.

கழுகு மிக உயரத்தில் பறந்ததைப் பார்த்தேன்.

உழவுக்கும், தொழிலுக்கும் வந்தனை செய்வோம்.


திருமால் கருடவாகனம்

கருடனைத் திருமாலின் வாகனமாக வணங்குவார்கள்.

வெயிலுக்கு நுங்கைச் சாப்பிடுவது உடம்புக்கு நல்லது.

நான் குடத்திலிருந்து தண்ணீரை மொண்டுக் குடித்தேன்.

சுக்கு, மிளகு, திப்பிலி இவை மூன்றுக்கும் திரிகடுகம் என்று பெயர்.

அணுவைத் துளைத்து, ஏழ்கடலைப் புகுத்திக் குறுகத் தரித்த குறள்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துக்கள் – ஊ வரிசை

| | |
|---|---|
| கூடம் — கூ | மூடன் — மூ |
| ஙூ | யூதாஸ் — யூ |
| சூரியன் — சூ | ரூபாய் — ரூ |
| ஞூ | வல்லூறு — லூ |
| தகடூர் — டூ | கோவூர் — வூ |
| பூணூல் — ணூ | கீழூர் — ழூ |
| தூண் — தூ | உள்ளூர் — ளூ |
| நூறு — நூ | சிற்றூர் — றூ |
| பூட்டு — பூ | மானூர் — னூ |

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:


பூட்டு


கோட்டை


வல்லூறு


தூண்


இயேசுவின் சீடர் யூதாஸ்

அதியமான் கோட்டை தகடூரில் உள்ளது.

மாதவி கலைக்கூடத்தில் நடனமாடினாள்.

ஆலயத்தின் தூண்கள் கோபுரத்தைத் தாங்குகிறது.


அதியமான் ஔவை

மக்கள் ஒன்றுகூடும் இடத்திற்குக் கூடம் என்று பெயர்.

கல்வியறிவும், ஒழுக்கமும் இல்லாதவனை மூடன் என்பார்கள்.

தகடூர், கோவூர், கீழூர், மானூர் ஆகியவை ஊர்களின் பெயர்களாகும்.

மாலையில் சூரியன் மேற்கில் மறைவதைக் காண அழகாக இருக்கும்.

முப்பது வெள்ளிக் காசுகளுக்காக இயேசுவைக் காட்டிக் கொடுத்தார் யூதாஸ்.

உள்ளூர் மக்களுக்கு உதவி செய்தால் வெளியூர் மக்களும் விரும்புவார்கள்.

மனம், வாக்கு, செயல் ஆகியவற்றில் ஒழுக்கத்தை நினைவூட்டுவது பூணூல் என்று மத அறிஞர்கள் கூறுகிறார்கள்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – எ வரிசை

+ =
கெண்டை
கெ

+ =
மெட்டி
மெ

+ =
ஙெ

+ =
கையெழுத்து
யெ

+ =
செங்கல்
செ

+ =
பாரெங்கும்
ரெ

+ =
ஞெலுவன்
ஞெ

+ =
நல்லெண்ணெய்
லெ

+ =
சுண்டெலி
டெ

+ =
வெல்லம்
வெ

+ =
எண்ணெய்
ணெ

+ =
ழெ

+ =
தென்னை
தெ

+ =
சுள்ளென
ளெ

+ =
நெருப்பு
நெ

+ =
பெற்றெடு
றெ

+ =
பெயர்
பெ

+ =
பொன்னென
னெ

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:


கெண்டை மீன்


ஞெலுவன் நண்பன்


செங்கல்


மெட்டி


நல்லெண்ணெய்


சுண்டெலி


பனைவெல்லம்


சீனி


பனங்கற்கண்டு


உருண்டைவெல்லம்


அச்சுவெல்லம்


நாட்டுச் சர்க்கரை


கற்கண்டு

கெண்டைமீன் குளத்தில் நீந்துகிறது.

தமிழின் பெருமை பாரெங்கும் ஒலிக்கிறது.

கோடை வெயில் சுள்ளெனச் சுட்டெரிக்கும்.

காலத்தைப் பொன்னெனப் போற்றவேண்டும்.

எள்ளில் இருந்து கிடைப்பது நல்லெண்ணெய்.

கரும்புச்சாற்றைக் காய்ச்சினால் வெல்லம் கிடைக்கும்.

நல்ல பிள்ளைகளைப் பெற்றெடுத்த தாய் மகிழ்வாள்.

தினமும் எழுதிப் பழகினால் கையெழுத்து அழகாக இருக்கும்.

**ஆசிரியர் கவனத்திற்கு:**

ஒவ்வொரு வாக்கியத்தையும் கற்றுக்கொடுக்கும்போது, அதன் பொருளையும், அந்த வாக்கியம் சொல்லும் கருத்தின் சூழலையும் விரிவாக விளக்க வேண்டும்.

தமிழை மிகத் தெளிவாகவும், சரளமாகவும் பேசுவதற்கு எளிய வாக்கியங்கள் உதவும்.

இந்த வாக்கியங்களைப் பலமுறை பேசப் பயிற்சி அளிக்க வேண்டும்.

பயிற்சித் தாளிலும் பலமுறை எழுதப் பணிக்க வேண்டும்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஏ வரிசை

| | |
|---|---|
| கேளீர் | மேளம் |
| கே | மே |
| ஙே | வெளியே |
| | யே |
| சேனை | பாரேன் |
| சே | ரே |
| ஞேயம் | பாலேடு |
| ஞே | லே |
| கண்டேன் | வேலி |
| டே | வே |
| கண்ணே | தாழேன் |
| ணே | ழே |
| தேன் | உள்ளே |
| தே | ளே |
| நேரம் | பெற்றேன் |
| நே | றே |
| பேரம் | பின்னே |
| பே | னே |

___ + ___ = ___

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:


தேன்கூடு


வேலி


சேனைக் கிழங்கு


அனுமன் கூற்று

நான் ஒருபோதும் தாழேன்.


காய்ச்சியப் பால்

யாதும் ஊரே யாவரும் கேளீர்.

கல்யாண வீட்டில் மேளச் சத்தம் கேட்கும்.


பாலாடைக் கட்டி

நன்றாகப் படித்து நல்ல பெயரைப் பெற்றேன்.

கண்டேன் சீதையை என்று அனுமன் கூறினார்.


கச்சேரி ஊர்வலம்

காலமும் நேரமும் யாருக்காகவும் காத்திருக்காது.

யானை வரும் முன்னே! மணி ஓசை வரும் பின்னே!

சந்தையில் பேரம் பேசிப் பொருளை வாங்குவார்கள்.

ஞேயம் காத்தல் செய். அன்பைக் காத்திட வேண்டும்.

தேனீக்கள் சுறுசுறுப்பாகப் பறந்து தேனைச் சேகரிக்கும்.

வேலி வீட்டைக் காக்கும். வெளியே பாரேன் ! பனி பெய்கிறது.

கண்ணே, கண்மணியே என்று அம்மா குழந்தையைக் கொஞ்சுவாள்.

காய்ச்சிய பாலின் மேல் படியும் ஆடைக்குப் பாலேடு என்று பெயர்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஐ வரிசை

___ + ___ = ___

கைதி

கை

___ + ___ = ___

ஆமை

மை

___ + ___ = ___

ஙை

___ + ___ = ___

வையை - வைகை

யை

___ + ___ = ___

பச்சை

சை

___ + ___ = ___

கரை

ரை

___ + ___ = ___

ஆஞ்ஞை

ஞை

___ + ___ = ___

மாலை

லை

___ + ___ = ___

குடை

டை

___ + ___ = ___

பறவை

வை

___ + ___ = ___

அணை

ணை

___ + ___ = ___

மழை

ழை

___ + ___ = ___

சந்தை

தை

___ + ___ = ___

வெள்ளை

ளை

___ + ___ = ___

நையாண்டி

நை

___ + ___ = ___

அறை

றை

___ + ___ = ___

பையன்

பை

___ + ___ = ___

பானை

னை

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:


பசுமையான வயல்வெளி


பறவைகள்


குயவன் வனையும் மண்பாண்டம்.

படிக்கும் பையன் தான் பட்டம் பெறுவான்.


பானை


சட்டி

அஞ்சிலே வளையாதது ஐம்பதில் வளையாது.

மழைக்காலத்தில் அணையில் நீர் நிரம்பி வழியும்.


கல்லணை

சந்தையில் எல்லாப் பொருள்களையும் வாங்கலாம்.

வையை நதியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.

அரசனின் ஆக்ஞைப்படி (ஆணை) நடக்கவேண்டும்.


குடை


மழை

கிராமத்தில் வயல்கள் பச்சைப் பசேலென்று இருந்தது.

ஆமை நீரிலும், நிலத்திலும் வாழக்கூடிய ஓர் உயிரினம்.

சுவரெல்லாம் கறையாக இருப்பதால் வெள்ளையடிக்க வேண்டும்.

காலையில் கடைக்குச் சென்று மாலையில்தான் வீட்டிற்கு வந்தோம்.

வீட்டிற்கு வரும் வழியில் மழை பெய்ததால் குடையையும் வாங்கினோம்.

குயவன் சேற்றைக் குழைத்துப் பானைகளையும், சட்டிகளையும் வனைகிறார்.

## அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஒ வரிசை

+ =

கொடி

கொ

+ =

ஞொ

+ =

சொந்தம்

சொ

+ =

ஞொ

+ =

பட்டொளி

டொ

+ =

கண்ணொளி

ணொ

+ =

தொட்டி

தொ

+ =

நொண்டி

நொ

+ =

பொட்டு

பொ

+ =

மொட்டு

மொ

+ =

வாயொலி

யொ

+ =

ரொட்டி

ரொ

+ =

சேவலொன்று

லொ

+ =

கரவொலி

வொ

+ =

ழொ

+ =

உள்ளொன்று

ளொ

+ =

மற்றொன்று

றொ

+ =

வானொலி

னொ

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:


கோதுமை ரொட்டி


கொடி (தாவரம்)


மூவேந்தர் கொடி


சேவல்

கோதுமை ரொட்டி உடலுக்கு நல்லது.

காலில் அடி பட்டதால் நாய் நொண்டியது.


தண்ணீர்த் தொட்டி

வாயொலிதான் வார்த்தைக்கு மூலமானது.

விடியற்காலையில் சேவலொன்று கூவியது.


பொட்டு வானொலி

மல்லிகை மொட்டு மலர்ந்ததும் மணம் வீசும்.

தொட்டியில் உள்ள நீரைக் குதிரை குடிக்கிறது.


மல்லிகை

தினமும் வானொலியில் செய்திகளைக் கேட்பேன்.

ஒன்றுக்குப் பதிலாக மற்றொன்றைக் கொடுத்தான்.

மூவேந்தர்களின் கொடிகள் பட்டொளி வீசிப் பறக்கின்றன.

நெற்றியில் இடும் பொட்டு (திலகம்) ஒரு மங்கலச் சின்னம்.

இயற்கையின் படைப்புகள் அனைத்தும் எல்லோருக்கும் சொந்தம்.

பார்வையற்றோர் கண்ணொளிபெறக் கண் தானம் செய்ய வேண்டும்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர் உறவு கலவாமை வேண்டும்.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துகள் – ஓ வரிசை

கோயில்
கோ

மோர்
மோ

ஙோ

யோகம்
யோ

சோறு
சோ

தேரோட்டி
ரோ

ஞோ

நல்லோர்
லோ

உண்டோ
டோ

திருவோடு
வோ

விண்ணோர்
ணோ

கீழோர்
ழோ

தோண்டி
தோ

குறளோசை
ளோ

நோன்பு
நோ

ஆன்றோர்
றோ

போராட்டம்
போ

மனோன்மணி
னோ

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:


சோறு




திருவோடு

தேர்


தேரோட்டி

அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்.

போராடினால் தான் வெற்றி கிடைக்கும்.

தோல்வியை நினைத்து மனம் தளரக்கூடாது.

தாகத்தைத் தணிக்க மோர் குடிப்பது நல்லது.

குறளோசை உலகெங்கும் ஒலிக்க வேண்டும்.

மனோன்மணியம் தமிழின் ஒப்பற்ற நாடக நூல்.

இசுலாமியர்களின் புனிதப் பண்டிகை ரம்சான் நோன்பு.

இராமனின் திருமணத்தை விண்ணோர்களும் வாழ்த்தினர்.

ஆன்றோரின் வாக்குகள் எல்லாம் நமக்கு வழிகாட்டுகின்றன.

தேரோட்டிக்கு நல்ல யோகம்தான், அரசரிடமிருந்து பரிசு கிடைத்தது.

கோயில் வாசலில் உள்ள பிச்சைக்காரன் திருவோடு வைத்திருந்தான்.

மண்ணை ஆழமாகத் தோண்டி கிணறு வெட்டினால் தண்ணீர் கிடைக்கும்.

நல்லோர் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லோருக்கும் பெய்யும் மழை.

பேராசிரியர் மு வரதராசனார் எழுதிய புகழ்பெற்ற புதினத்தின் பெயர் கள்ளோ காவியமோ.

# அரிச்சுவடி – உயிர்மெய் எழுத்துக்கள் – ஔ வரிசை

| | |
|---|---|
| ☐ + ☐ = ☐<br>கௌதாரி<br>கௌ | ☐ + ☐ = ☐<br>மௌனம்<br>மௌ |
| ☐ + ☐ = ☐<br>ஙௌ | ☐ + ☐ = ☐<br>யௌவனம்<br>யௌ |
| ☐ + ☐ = ☐<br>சௌரி - சவுரி<br>சௌ | ☐ + ☐ = ☐<br>திரௌபதி<br>ரௌ |
| ☐ + ☐ = ☐<br>ஞௌ | ☐ + ☐ = ☐<br>லௌகீகம்<br>லௌ |
| ☐ + ☐ = ☐<br>டௌ | ☐ + ☐ = ☐<br>வௌவால்<br>வௌ |
| ☐ + ☐ = ☐<br>ணௌ | ☐ + ☐ = ☐<br>ழௌ |
| ☐ + ☐ = ☐<br>தௌதிகம்<br>தௌ | ☐ + ☐ = ☐<br>ளௌ |
| ☐ + ☐ = ☐<br>நௌவி<br>நௌ | ☐ + ☐ = ☐<br>றௌ |
| ☐ + ☐ = ☐<br>பௌர்ணமி<br>பௌ | ☐ + ☐ = ☐<br>னௌ |

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:


சௌரி


காடை


வௌவால்


கௌதாரி




(மான்) நௌவி


முத்து


பௌர்ணமி

திரௌபதி

வௌவால் தலைகீழாகத் தொங்கும்.


சிலம்பு

திரௌபதிக்குக் கண்ணன் ஆடை தந்து உதவினார்.

இந்துக்கள் சித்ரா பௌர்ணமியில் விரதம் இருப்பார்கள்.

உலகப் பற்றுள்ள வாழ்க்கையே லௌகீக வாழ்க்கையாகும்.

சடையை நீளமாகப் பின்னுவதற்கு சௌரி முடியை பயன்படுத்துவார்கள்.

எண்ணங்களும், வார்த்தைகளும் இல்லாத பேரின்ப நிலைதான் மௌனம்.

கோப்பெருந்தேவியின் காற்சிலம்பில் தௌதிகப் பரல்கள் (முத்துப் பரல்கள்) இருந்தன.

காடையும், கௌதாரியும் அடர்ந்த முட்புதர்கள் நிறைந்த வறண்ட நிலத்தில் வசிக்கும் பறவைகள்.

தினமும் உடற்பயிற்சி செய்து அளவாகச் சாப்பிட்டால் யௌவனமாக (அழகாக, இளமையாக) வாழலாம்.

## எண்கள்

ஆசிரியர் கவனத்திற்கு: ஒன்று முதல் நூறு வரை பிழையின்றி எண்ணாலும், எழுத்தாலும் பார்க்காமல் எழுதவும், சொல்லவும் தெரியவேண்டும். ஐந்தின் மடங்கும், பத்தின் மடங்கும் அறிந்திருத்தல் அவசியம்.

| | | | |
|---|---|---|---|
| 1. ஒன்று | 11. பதினொன்று | 21. இருபத்தி ஒன்று | 31. முப்பத்தி ஒன்று |
| 2. இரண்டு | 12. பன்னிரெண்டு | 22. இருபத்தி இரண்டு | 32. முப்பத்தி இரண்டு |
| 3. மூன்று | 13. பதிமூன்று | 23. இருபத்தி மூன்று | 33. முப்பத்தி மூன்று |
| 4. நான்கு | 14. பதினான்கு | 24. இருபத்தி நான்கு | 34. முப்பத்தி நான்கு |
| 5. ஐந்து | 15. பதினைந்து | 25. இருபத்தி ஐந்து | 35. முப்பத்தி ஐந்து |
| 6. ஆறு | 16. பதினாறு | 26. இருபத்தி ஆறு | 36. முப்பத்தி ஆறு |
| 7. ஏழு | 17. பதினேழு | 27. இருபத்தி ஏழு | 37. முப்பத்தி ஏழு |
| 8. எட்டு | 18. பதினெட்டு | 28. இருபத்தி எட்டு | 38. முப்பத்தி எட்டு |
| 9. ஒன்பது | 19. பத்தொன்பது | 29. இருபத்தி ஒன்பது | 39. முப்பத்தி ஒன்பது |
| 10. பத்து | 20. இருபது | 30. முப்பது | 40. நாற்பது |

| | | |
|---|---|---|
| 41. நாற்பத்தி ஒன்று | 51. ஐம்பத்தி ஒன்று | 61. அறுபத்தி ஒன்று |
| 42. நாற்பத்தி இரண்டு | 52. ஐம்பத்தி இரண்டு | 62. அறுபத்தி இரண்டு |
| 43. நாற்பத்தி மூன்று | 53. ஐம்பத்தி மூன்று | 63. அறுபத்தி மூன்று |
| 44. நாற்பத்தி நான்கு | 54. ஐம்பத்தி நான்கு | 64. அறுபத்தி நான்கு |
| 45. நாற்பத்தி ஐந்து | 55. ஐம்பத்தி ஐந்து | 65. அறுபத்தி ஐந்து |
| 46. நாற்பத்தி ஆறு | 56. ஐம்பத்தி ஆறு | 66. அறுபத்தி ஆறு |
| 47. நாற்பத்தி ஏழு | 57. ஐம்பத்தி ஏழு | 67. அறுபத்தி ஏழு |
| 48. நாற்பத்தி எட்டு | 58. ஐம்பத்தி எட்டு | 68. அறுபத்தி எட்டு |
| 49. நாற்பத்தி ஒன்பது | 59. ஐம்பத்தி ஒன்பது | 69. அறுபத்தி ஒன்பது |
| 50. ஐம்பது | 60. அறுபது | 70. எழுபது |

| | | |
|---|---|---|
| 71. எழுபத்தி ஒன்று | 81. எண்பத்தி ஒன்று | 91. தொண்ணூற்றி ஒன்று |
| 72. எழுபத்தி இரண்டு | 82. எண்பத்தி இரண்டு | 92. தொண்ணூற்றி இரண்டு |
| 73. எழுபத்தி மூன்று | 83. எண்பத்தி மூன்று | 93. தொண்ணூற்றி மூன்று |
| 74. எழுபத்தி நான்கு | 84. எண்பத்தி நான்கு | 94. தொண்ணூற்றி நான்கு |
| 75. எழுபத்தி ஐந்து | 85. எண்பத்தி ஐந்து | 95. தொண்ணூற்றி ஐந்து |
| 76. எழுபத்தி ஆறு | 86. எண்பத்தி ஆறு | 96. தொண்ணூற்றி ஆறு |
| 77. எழுபத்தி ஏழு | 87. எண்பத்தி ஏழு | 97. தொண்ணூற்றி ஏழு |
| 78. எழுபத்தி எட்டு | 88. எண்பத்தி எட்டு | 98. தொண்ணூற்றி எட்டு |
| 79. எழுபத்தி ஒன்பது | 89. எண்பத்தி ஒன்பது | 99. தொண்ணூற்றி ஒன்பது |
| 80. எண்பது | 90. தொண்ணூறு | 100. நூறு |




# உலக நீதி – 1

ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போக வேண்டாம்
போகவிட்டுப் புறம் சொல்லித் திரிய வேண்டாம்

*உலகநாதர்*

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

நீ ஒரு நாளும் நூல்களைப் படிக்காமல் இருக்காதே (தினமும் படி).

எவரையும் தீய சொற்களால் நிந்திக்காதே.

அம்மாவை ஒரு பொழுதும் மறவாதே.

கபடச்செயல்களைச் செய்யும் கீழ் மக்களுடன் சேராதே.

செல்லத்தகாத இடத்திற்குச் செல்லாதே.

ஒருவர் சென்றபிறகு, அவரைப் பற்றிக் குறை கூறாதே

**சொல்லும் பொருளும்:**

ஓதாமல்----------- நூல்களைப் கற்காமல்
பொல்லாங்கு-- தீமையான சொற்கள்
மாதாவை-------- அம்மாவை
வஞ்சனை------- கபடம்
நெஞ்சார--------- மனம் பொருந்தாத
அஞ்சாமல்------ பயப்படாமல்

**ஆசிரியர் கவனத்திற்கு:**

உலகநீதி மற்றும் ஆத்திசூடி ஆகிய இரண்டு பாடங்களையும் அதன் பொருளையும் மாணவர்கள் தெளிவாக எழுதவும் பேசவும் கற்றிருக்க வேண்டும்.
இப்பாடங்கள் முழுவதும் மனனப்பயிற்சிக்கு உரியவை.

**சான்றோர் கூற்று**

எழுதுகோல் தெய்வம்
இந்த எழுத்தும் தெய்வம்

*மகாகவி பாரதியார்*

# நானிலங்கள்

பூமியின் இயற்கை அமைப்பை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு வகைகளாகப் பிரித்தனர். அவற்றுள் மழை பெய்யாமல், நீரின்றி வரண்டு இருக்கும் நிலத்தைப் பாலை நிலம் என்று அழைத்தனர்.



## குறிஞ்சி

மலையும், மலையைச் சார்ந்த பகுதியும் குறிஞ்சி என்று அழைக்கப்படும்.

மலை, பாறை, கல், அருவி.



## முல்லை

காடும், காட்டைச் சார்ந்த பகுதியும் முல்லை என்று அழைக்கப்படும்.

செடி, மரம், கொடி, புதர்.



## மருதம்

வயலும், வயலைச் சார்ந்த பகுதியும் மருதம் என்று அழைக்கப்படும்.

நிலம், புல், வயல், வரப்பு, மரம்.



## நெய்தல்

கடலும், கடலைச் சார்ந்த பகுதியும் நெய்தல் என்று அழைக்கப்படும்.

கடல், கரை, அலை, உப்பு.



## பாலை

மணலும், வரண்ட நிலப்பகுதியும் பாலை என்று அழைக்கப்படும்.

மண், மணல், முள், புதர், காய்ந்த மரம்.

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:

காட்டில் வாழ்வது புலி

மரத்தில் காய்ப்பது புளி

மாட்டுக்கு இருப்பது வால்

மரத்தை அறுப்பது வாள்

ஆசையில் தின்பது வெல்லம்

ஆற்றில் வருவது வெள்ளம்

உயர்ந்து நிற்பது மலை

உயிருக்குத் தேவை மழை

| ஒருமை | பன்மை |
|---|---|
| கல் | கற்கள் |
| முள் | முட்கள் |
| புல் | புற்கள் |
| செடி | செடிகள் |
| கொடி | கொடிகள் |
| புதர் | புதர்கள் |
| மரம் | மரங்கள் |
| நிலம் | நிலங்கள் |
| வயல் | வயல்கள் |
| அலை | அலைகள் |



புலி ______



புளி ______



வாள் ______

## கோடிட்ட இடத்தை நிரப்புக:

| | | | |
|---|---|---|---|
| மரம் - | ______ | ______ | - செடி |
| கொடி - | ______ | ______ | - கல் |
| புல் - | ______ | ______ | - நிலம் |
| அலை - | ______ | ______ | - புதர் |
| முள் - | ______ | ______ | - வயல் |



வால் ______

| நிலம் | நிலத்தைச் சார்ந்தப் பகுதிகள் |
|---|---|
| குறிஞ்சி | - |
| முல்லை | - |
| மருதம் | - |
| நெய்தல் | - |
| பாலை | - |

## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

______

______

நிலங்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

______

## இயற்கை

வானம் கறுத்தால் மழை பெய்யும்,
மழை பெய்தால் மண் குளிரும்
மண் குளிர்ந்தால் புல் தழைக்கும்,
புல் தழைத்தால் பசு மேயும்
பசு மேய்ந்தால் பால் சுரக்கும்,
பால் சுரந்தால் கன்று குடிக்கும்
கன்று குடித்து மிஞ்சியதைக்
கறந்து கொண்டு வந்திடலாம்!
காப்பியில் விட்டுக் குடித்திடலாம்.

## பாலும் தயிரும்

அம்மா பாலைக் கறந்திடுவாள்,
பாலைக் காய்ச்சி ஆறவைப்பாள்
ஆறின பாலில் உறைவிடுவாள்,
உறைவிட்ட பால் தயிராகும்
தயிரைக் கடைந்தால் மோராகும்,
மோரில் வெண்ணெய் படர்ந்துவரும்
வெண்ணையை உருக்கினால் நெய்யாகும்,
நெய்யில் அப்பம் சுட்டிடலாம்
நீயும் நானும் தின்றிடலாம்.



கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை



## படத்தில் காணும் பொருள்களின் பெயர்களை எழுது:

காட்சிக்குரிய பாடல்: இயற்கை, பாலும் தயிரும்

பசு மாடு, கன்றுக் குட்டி, வானம், மேகம், வானவில், மழை, மண், புல், பாத்தி, செடி, மரம், பூக்கள், முள், முட்புதர், பாத்திரம், குடிசை, குச்சி, குழந்தை, பாட்டி, சேலை, புடவை, உரம், பாதை, கொம்பு, கற்கள், அம்மா.

## வாக்கியங்களை உச்சரித்துப் பழகு:

வானம் இருண்டு இருக்கிறது.

வானத்தில் மேகங்கள் இருக்கின்றன.

வானவில்லின் வண்ணங்கள் அழகாக இருக்கின்றன.

தோட்டத்தில் நிறைய செடிகளும், மரங்களும் இருக்கின்றன.

அங்கே அம்மாவும், பாட்டியும், பாப்பாவும் இருக்கிறார்கள்.

பசுமாடும், கன்றுக்குட்டியும் கூட தோட்டத்தில் இருக்கின்றன.

## குழு விளையாட்டுப் பயிற்சி முறை: ஆசிரியர் கவனத்திற்கு:

இயற்கையையும், தமிழரின் பாரம்பரியத்தையும் விளக்குவதற்கு ஏற்ற மிக அற்புதமான பாடல்கள் இவை. கிராமத்துச் சூழ்நிலையையும், குழந்தை, பெற்றோர், பாட்டி தாத்தா என்ற மூன்று தலைமுறைப் பிணைப்பை மாணவர்களுக்கு விளக்கவேண்டும்.

பயிற்சி முறை:

என்னவாகும்? என்ன செய்வாள்? இந்த இரண்டு கேள்விகளையும் பயன்படுத்தி பயிற்சி பெற வேண்டும். மாணவர்களை இரண்டு குழுக்களாகப் பிரித்து ஒரு குழு கேள்வி கேட்க மற்றொரு குழு பதில் சொல்ல வேண்டும்.

முதல் குழு வானம் கருத்து இருக்கிறது என்று சொல்ல வேண்டும்.
இரண்டாவது குழு வானம் கருத்தால் என்னவாகும்? என்று கேள்வி கேட்க வேண்டும்.
அதற்கு பதிலாக வானம் கருத்தால் மழை பெய்யும் முதல் குழு பதில் சொல்லும்.

மழை பெய்தால் என்னவாகும்? என்ற கேள்விக்கு மழை பெய்தால் மண்குளிரும் என்ற பதில்...இதைப்போலவே

அம்மா என்ன செய்வாள்? என்ற கேள்விக்கு அம்மா பாலைக் கறந்திடுவாள் என்றும் பாலைக் கறந்து என்ன செய்வாள்? பாலைக்காய்ச்சி ஆறவைப்பாள் என்று கேள்வியும் பதிலுமாக இரண்டு குழுக்களும் விளையாடிப் பயில வேண்டும்.

வாசித்துப்பழகு
எழுதிப்பழகு:

# ஐம்புலன்கள்

நம்மைச் சுற்றி நடக்கும் செயல்களை நாம் உணர்ந்து-கொள்வதற்கு, நம் உடலில் உள்ள ஐந்து உறுப்புகள் உதவுகின்றன.

அவை மெய், வாய், கண், மூக்கு, செவி எனப்படும். இந்த ஐந்து உறுப்புகளையும் ஐம்புலன்கள் என்று நாம் அழைக்கின்றோம்.


மெய்


வாய்


கண்


மூக்கு


செவி

நான் நெருப்பைத் தொடுகிறேன்.
நெருப்பு சூடாக இருக்கிறது.
நான் பழத்தைச் சாப்பிடுகிறேன்.
பழம் ருசியாக இருக்கிறது.
நான் படத்தைப் பார்க்கிறேன்.
படம் அழகாக இருக்கிறது.
நான் மலரை முகர்கிறேன்.
மலர் நறுமணமாக இருக்கிறது.
நான் இசையைக் கேட்கிறேன்.
இசை இனிமையாக இருக்கிறது.

மெய் உணர்கிறது
வாய் சுவைக்கிறது
கண் பார்க்கிறது
மூக்கு முகர்கிறது
செவி கேட்கிறது

நறுமணம் - வாசனை
ஐம்புலன்கள் - ஐந்து புலன்கள்

**ஆசிரியர் கவனத்திற்கு:**

ஐம்புலங்களின் செயல்களையும், விளைவுகளையும் குறித்து விரிவாக விளக்க வேண்டும்.

இந்தப் பாடத்தில் உள்ள ஒவ்வொரு சொல்லையும் மாணவர்கள் மனனம் செய்யவேண்டும்.

சரியான உச்சரிப்புடன் பேசுவதற்குப் பயிற்சியளிக்க வேண்டும். எழுதும் பயிற்சி அவசியம்.

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:

| வாக்கியம் | புலன்கள் | உணர்ச்சி |
|---|---|---|
| நான் பழத்தைச் சுவைக்கிறேன். | வாய் | சுவை |
| நீ நெருப்பைத் தொடுகிறாய். | மெய் | தொடு |
| அவன் இசையைக் கேட்கிறான். | செவி | கேள் |
| அவள் படத்தைப் பார்க்கிறாள். | கண் | பார் |
| அவர் மலரை முகர்கிறார். | மூக்கு | முகர் |
| நாங்கள் பழங்களைச் சுவைக்கிறோம். | வாய் | கேள் |
| நீங்கள் நெருப்பைத் தொடுகிறீர்கள். | மெய் | தொடு |
| அவர்கள் மலர்களை முகர்கிறார்கள். | மூக்கு | முகர் |

## கீழ்க்கண்டச் சொற்களைக்கொண்டு வாக்கியங்களை எழுது:

நான், நீ,
அவன், அவள், அவர், அது,
நீங்கள்,
அவர்கள்,
அவை.



அம்மா, அப்பா, சொல்வதைக்
காய்கறிகளை
ஓவியத்தை
யானையை
பூக்களை

நான்

நீ

அவன்

அவள்

அவர்

அது

அவை

நீங்கள்

அவர்கள்

வாசித்துப்பழகு
எழுதிப்பழகு:

## ஆத்திசூடி

ஔவையார்

**பொருள்**

அறம் செய்ய விரும்பு --- பிறர்க்கு உதவிசெய்.

ஆறுவது சினம் -------------- கோபத்தை அடக்கு.

இயல்வது கரவேல் -------- மற்றவருக்கு உதவத்தயங்காதே.

ஈவது விலக்கேல் ----------- மற்றவர் கொடுப்பதைத் தடுக்காதே.

உடையது விளம்பேல் ---- தற்பெருமை கூடாது. ?

ஊக்கமது கைவிடேல் ---- தன்னம்பிக்கையை இழக்காதே.

எண் எழுத்து இகழேல் -- கணிதத்தையும் இலக்கியத்தையும் தூற்றாதே.

ஏற்பது இகழ்ச்சி ----------- யாசிப்பது இகழ்ச்சி.

ஐயம் இட்டு உண் --------- பிச்சையிட்டு பிறகு உண்.

ஒப்புரவு ஒழுகு ------------- உலகத்தோடு ஒற்று வாழ்.

ஓதுவது ஒழியேல் --------- கற்பதைக்கைவிடாதே.

ஔவியம் பேசேல் --------- பொறாமைகொண்டு பேசாதே.

அஃகம் சுருக்கேல் --------- தானியங்களைக்குறைத்து விற்காதே.

**சான்றோர் கூற்று**

தமிழுக்கும் அமுதென்று பேர்!
அந்தத் தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!

*புரட்சிக்கவி பாரதிதாசன்*

மூதுரை-8

## நல்லவர் தொடர்பின் நன்மை

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே - நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

ஔவையார்

நல்லாரைக் -------------------- நல்ல குணமுடையவரை
காண்பதுவும் நன்றே ------ பார்ப்பதுவும் நல்லதே
நல்லார் ------------------------- நல்லவருடைய
நலமிக்க சொல் ------------ பயன் நிறைந்த சொற்களை
கேட்பதுவும் நன்றே ------- கேட்பதுவும் நல்லதே
நல்லார் குணங்கள் -------- நல்லவருடைய நல்ல குணங்களைப் பற்றி
உரைப்பதுவும் நன்றே --- பேசுவதும் நல்லதே
அவரோடு இணங்கி ------- அந்த நல்லவருடன் சேர்ந்து
இருப்பதுவும் நன்று ------- இருப்பதுவும் நல்லதே.

### எதிர்ச்சொல்

காடு x நாடு
ஏழை x செல்வந்தர்
ஏழை x செல்வன்
கருப்பு x வெள்ளை
குளிர் x வெப்பம்
நிழல் x வெயில்
சுறுசுறுப்பு x சோம்பல்
வெற்றி x தோல்வி
வேகமாக x மெதுவாக

**ஆசிரியர் கவனத்திற்கு:**

அட்டவணைச் சொற்களைக் கொண்டு கதை சொல்ல வேண்டும். உதாரணமாக: ஒரு நாட்டில் ஒரு காடும் அருகே ஒரு கிராமமும் இருந்தது. அங்கே சில ஏழை மக்கள் வசித்து வந்தார்கள்.

### எண்களை எழுத்தால் எழுது. (11-40)

| | | |
|---|---|---|
| 30. | 22. | 19. |
| 27. | 17. | 36. |
| 13. | 35. | 25. |
| 24. | 28. | 12. |
| 18. | 11. | 31. |
| 40. | 38. | 23. |
| 37. | 32. | 14. |
| 15. | 20. | 34. |
| 33. | 26. | 39. |
| 29. | 16. | 21. |

தொங்க விட்ட சட்டையைத்
தூக்கிக் கீழே போட்டவன்
யார், யார், யார் ?
எழுதி வைத்த தாள்களை
இங்கும் அங்கும் இறைத்தவன்
யார், யார், யார் ?
சன்னல் கதவைப் பட்டெனச்
சாத்திவிட்டுச் சென்றவன்
யார், யார், யார் ?
அருகில் நிற்கும் மரங்களை
அசைத்தே ஆடச் செய்தவன்
யார், யார், யார் ?
கண்டு பிடிக்க முடியுமா ?
காணா முடியாக் காற்றே தான்!

அழ. வள்ளியப்பா

## காற்று



தாவரங்கள் உயிர் வாழவும், நாம் சுவாசிக்கவும் காற்று அவசியம் தேவை. காற்று இல்லாமல் நாம் உயிர் வாழ முடியாது.

அசுத்தமானக் காற்று நோய்களை உண்டாக்கும். அது நச்சுக்காற்றாகும். தூய்மையான காற்று நம்முடைய உடலை ஆரோக்கியமாக வைத்திருக்க உதவும். ஆகவே காற்றை மாசுபடுத்தக் கூடாது.

நான்கு திசைகளிலிருந்தும் வீசுகின்ற காற்றிற்கு கொண்டல், கோடை, வாடை, தென்றல் என்று நான்கு பெயர்கள் உண்டு.

### பழமொழி

காற்றுள்ள போதே தூற்றிக் கொள்

ஆடிக் காற்றில் அம்மியும் பறக்கும்

கிழக்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் கொண்டல் - மழைக் காற்று
மேற்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் கோடை - வெப்பக் காற்று
வடக்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் வாடை - குளிர்க் காற்று
தெற்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் தென்றல் - மென்மைக் காற்று

### வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

1. அசுத்தமானக் காற்றின் மற்றொரு பெயர் ______ .
2. கொண்டல் காற்று ______ வீசும்.
3. தெற்கிலிருந்து ______ மென்மையாக வீசும்.
4. கோடையில் வீசும் காற்று வெப்பமாக இருக்கும்.
5. புயற்காற்றும், சூறாவளிக் காற்றும் வேகமாக வீசும்.
6. சூறாவளிக் காற்று மரங்களை வேரோடுப் பிடுங்கிவிடும்.

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

நேற்று காற்று வேகமாக வீசியது.

அப்போது நான் தோட்டத்தில் இருந்தேன்.

துணிகளை கொடியில் உலர்த்திக் கொண்டிருந்தேன்.

உலர்த்திய துணிகள் எல்லாம் காற்றில் பறந்தன.

என் தலைமுடிகள் கூட கலைந்துவிட்டன.

மரக்கிளைகள் எல்லாம் இங்கும் அங்கும் வேகமாக ஆடின.

மரத்தின் பழுத்த இலைகளும், பழங்களும் உதிர்ந்து விட்டன.

காற்று இல்லாமல் நாம் உயிர் வாழ முடியாது தான்.

ஆனால் புயல் காற்றும், சூறாவளிக் காற்றும் நமக்கு ஆபத்தானவை.

குறளமுதம்:108 அதிகாரம் : செய்ந்நன்றி அறிதல்

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

பொருள்:
ஒருவர் நமக்குச் செய்த நன்மைகளை மறப்பது அறமாகாது (பண்பாகாது). அவர் செய்த தீமையைச் செய்த அப்பொழுதே மறந்து விடுவது நல்ல செயலாகும்.

சொல்லும் பொருளும்:

நன்றி மறப்பது ---- பிறர் செய்த நன்மையை மறந்துவிடுவது
நன்று அன்று ------- அறமாகாது (பண்பாகாது)
நன்று அல்லது ----- அவர் செய்த நன்மை அல்லாத தீமை
அன்றே ---------------- செய்த அப்பொழுதே
மறப்பது நன்று ---- மறந்துவிடுவது நல்ல செயலாகும்

# மழை

உலகின் எல்லா உயிர்களும் வாழ நீர் மிக அவசியம். நாம் குடிப்பதற்கும், குளிப்பதற்கும் நீர் தேவைப்படுகிறது.

இந்த உலகத்தின் பெரும் பகுதி கடல் நீரால் நிறைந்து இருக்கிறது. ஆனால் அந்தக் கடல் நீரைக் குளிக்கவும், குடிக்கவும் பயன்படுத்த முடியாது. ஏனென்றால் கடல் நீர் உப்பு கரிக்கும்.

கடல் நீர் சூரிய வெப்பத்தால் ஆவியாகி மேலே ஆகாயத்திற்குச் செல்கிறது. அந்த ஆவி வானத்தில் குளிர்ந்து, மழையாகப் பெய்கிறது. மழையால் ஏரிகளும், குளங்களும் நிறைகின்றன.

மலையின் மீது பெய்யும் மழை நீரும், ஊற்று நீரும் மலையிலிருந்து அருவியாகக் கொட்டுகிறது. அந்த அருவிகள் நதிகளாக ஓடுகின்றன.

மழை பெய்தால்தான் நதிகளிலும், கிணறுகளிலும், குளங்களிலும் நீர் நிறைந்து இருக்கும்.

ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் ஆகியவைகள் நாம் குடிப்பதற்கும், குளிப்பதற்கும் ஏற்ற நீராகும். ஆகவே நாம் உயிர் வாழ்வதற்கு மழை நீர் மிகவும் அவசியம்.

இதைத்தான் வள்ளுவரும் 'மழை உலகின் எல்லா உயிர்களுக்கும் சாகா மருந்து' என்றார். ஆகவே மழை நீரைச் சேகரிப்போம். இயற்கையைப் பாதுகாப்போம்.

வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று

வானிலிருந்து வரும் மழையால் உலகிலுள்ள உயிரினங்கள் தொடர்ந்து வாழ்கின்றன. அதனால் மழையானது அழியாத வாழ்வை அளிக்கும் அமிழ்தத்திற்கு இணையானது என்பதை உணரவேண்டும்.

பாடத்திலுள்ள எல்லா வாக்கியங்களையும் சுழற்சி முறையில் எல்லா மாணவர்களும் படிக்க வேண்டும். கேள்விக்குண்டான பதில்கள் அனைத்தையும் மனப்பாடமாகச் சொல்ல வேண்டும்.

வாசித்துப்பழகு
எழுதிப்பழகு:

## வா மழையே வா

கத்திக் கப்பல் செய்து வைத்தேன்
கால்வாய் கூடத் தோண்டி வைத்தேன்
வா மழையே வா
வா மழையே வா

சின்னச் செடியை நட்டு வைத்தேன்
செப்புக் குடத்தை எடுத்து வைத்தேன்
வா மழையே வா
வா மழையே வா

வீதிப் பக்கம் வந்து நின்றேன்
மேலே மேலே பார்த்து நின்றேன்
வா மழையே வா
வா மழையே வா







### வினாவிற்கு ஏற்ற விடை எழுது:

1. அமிழ்தம் என்பது என்ன?
______

2. குடிப்பதற்கு ஏற்ற நீர் எது?
______

3. வள்ளுவர் மழையை எப்படிப் போற்றுகின்றார்?
______

### கோடிட்ட இடத்தை நிரப்புக:

1. ஆவி ______ குளிர்ந்து, ______ பெய்கிறது.
2. உலகின் எல்லா ______ வாழ ______ மிக அவசியம்.
3. மழை நீரைச் ______, இயற்கையைப் ______.
4. மழையால் ______, ______ நிறைகின்றன.
5. மழை ______ எல்லா உயிர்களுக்கும் ______.
6. ______ நீர், ______ நீர், ______ நீர் ஆகியவைகள் நாம் ______, ______ ஏற்ற நீராகும்.

# உணவு

மனிதனின் அடிப்படைத் தேவை மூன்று. உண்ண உணவு, உடுக்க உடை, வசிக்க வீடு. இவற்றில், நாம் உயிர் வாழ உணவு மிக அவசியம். பல வகையான உணவுப் பொருள்கள் உள்ளன. அவற்றை காலை, மதியம், இரவு ஆகிய மூன்றுவேளைகளிலும் நாம் சாப்பிடுகிறோம். ஆரோக்கியமான உணவை நாம் உண்டால் நம்முடைய உடம்பும் ஆரோக்கியமாக இருக்கும்.

பசித்துப் புசி என்பது சான்றோர் வாக்கு.

## உணவுகளின் பெயர்களை எழுது:





குண்டு குண்டு இட்லிக்கு
குருமா சாம்பார் சட்னி
வட்டமான தோசையோடு
புட்டு இடி யப்பமும்
பூரி கிழங்கு சப்பாத்தியும்
சோறு குழம்பு இரசமோடு
அவியல் பொரியல் கூட்டு பச்சடி
அப்பளம் வடை பாயாசமும்
அன்போடு தருகிறேன்
எங்கள் வீட்டுக்கு வாருங்கள்
விருந்து உண்டு மகிழுங்கள்.

*நாகை கா. சுகுமாரன்*















## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1. மனிதனின் அடிப்படைத் தேவை என்ன?

2. நாம் எப்படிப்பட்ட உணவை உண்ண வேண்டும்?

3. நாம் எப்போது உண்ணவேண்டும்?

## வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:

**முதற்குழு**

நான் சாப்பிடப் போகிறேன்.

என்னைப் பார்த்து உனக்கு என்ன வேண்டுமென்று கேள்வி கேட்டார்.

என்னால் இன்றைக்கு நிறைய சாப்பிட முடியும்.

எனக்கு இனிப்பு சாப்பிடப் பிடிக்கும்.

என்னுடைய தட்டைவிடப் பெரிய தட்டை அவனுக்குக் கொடுங்கள்.

எனது குவளையில் தண்ணீரை ஊற்றுங்கள்.

என்னிடம் ஒரு கரண்டிதான் இருக்கிறது.

அம்மா இன்னும் கொஞ்சம் சாம்பார் ஊற்றுங்கள்.

**இரண்டாம் குழு**

நீ உன் தட்டில் உள்ளதையெல்லாம் சாப்பிடு.

உன்னை சாப்பிடக் கூப்பிட்டர்களா?

உன்னால் எத்தனை லட்டை சாப்பிட முடியும்?

உனக்கு என்ன தான் வேண்டும்? சொல்:

உன்னுடைய கிண்ணத்தில் பழங்கள் இருக்கின்றன.

உனது உடம்பை நன்றாகப் பார்த்துக்கொள்.

உன்னிடம் இருப்பதையெல்லாம் சாப்பிட்டு முடிக்க வேண்டும்.

அக்கா தாகமாக இருக்கிறது. தண்ணீர் கொடுங்கள்.

**மூன்றாம் குழு**

அவன் இன்னும் சாப்பிடவில்லை.

அவனைச் சாப்பிடக் கூப்பிடுங்கள்.

அவனால் குறைவாகத்தான் சாப்பிட முடியும்.

அவனுக்குப் பிடித்த உணவு எது?

அவனுடைய அப்பா பூந்தி வாங்கித் தருவார்.

அவனது இலையில் சோறு போடுங்கள்.

அவனிடம் இருப்பது எல்லாவற்றையும் சாப்பிடச் சொல்.

அண்ணா பக்கத்து இலைக்குக் கொஞ்சம் பாயசத்தை ஊற்றுங்கள்.

### ஆசிரியர் கவனத்திற்கு:

மாணவர்களை மூன்று குழுக்களாக அமர்த்தி, ஒரு குழுவிலுள்ளவர்கள் ஒரு வாக்கியத்தைச் சொல்ல, அடுத்த குழுவில் உள்ளவர்கள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்கியத்தைச் சொல்ல வேண்டும். குழுக்கள் இடத்தை மாற்றி கொண்டு பயிற்சியைத் தொடர வேண்டும்.

இந்தப் பாடத்திற்கு இரட்டிப்பு கவனம் தேவை. அன்றாடம் பயன்படுத்தப்படும் வாக்கியங்கள் இவை. இவை பேசுவதற்கும், எழுதுவதற்குமான பயிற்சி மட்டுமல்ல, பிறகு வர இருக்கின்ற தமிழ் இலக்கணப் பாடத்தின் அடிப்படையும் இந்தப் பாடத்தில் உள்ளது. எனவே இந்த வாக்கியங்களை தனித் தாளில் எழுதிப் பயிற்சி பெறவேண்டும். மனப்பாடமாகப் பேசத் தெரிய வேண்டும்.

நான் நீ அவன் என்ற சொற்களுக்குப் பதிலாக அவள், அவர், அது, நீங்கள், அவர்கள், அவை என்ற சொற்களைப் பயன்படுத்தி வாக்கியங்களை அமைக்கச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

# உடை



உடை நம்முடைய மானத்தைக் காப்பாற்றுகிறது. நமது உடலை காற்று, மழை, வெப்பம், குளிர் ஆகியவற்றிலிருந்துப் பாதுகாக்கிறது.

வெய்யில் காலத்தில் மெல்லிய உடையும், குளிர் காலத்தில் தடித்த உடையும் அணிகிறோம்.

உடைகள் பல வகைகளிலும், பல வண்ணங்களிலும் இருக்கின்றன. உடையின் மற்றொரு பெயர் ஆடை.

நாம் தூய்மையான உடையை உடுத்த வேண்டும். கந்தையானாலும் கசக்கிக் கட்டு என்பது சான்றோர் வாக்கு.


சுழற்காற்று


சூறாவளி


குல்லா


காலுறை


கையுறை


பாவாடை சட்டை


தாவணி இரவிக்கை


வேட்டி சட்டை


சேலை இரவிக்கை


சட்டை (பனியன்)


காற்சட்டை (ட்ரவுசர்)


கம்பளிச்சட்டை


துண்டு

**பொருளை அறிந்து வாசித்துப் பழகு:**

சுழற்காற்று, சூறாவளி, கையுறை, காலுறை, சேலை (புடவை), இரவிக்கை, சட்டை, வேட்டி, துண்டு, மேற்சட்டை, உள்ளாடை, காற்சட்டை, மேலாடை, குல்லா, தொப்பி, தாவணி, பாவாடை, கம்பளி, கைக்குட்டை, நீச்சலுடை (ஈரணி).

**வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:**

உடை - ஆடை

1. நாம் எதற்காக ஆடையை அணியவேண்டும்?

2. ஆடை எதிலிருந்து நம்மைப் பாதுகாக்கிறது?

வாசித்துப்பழகு - எழுதிப்பழகு:

ஆடைதான் நம் மானத்தைக் காத்து, மதிப்பை உயர்த்துகிறது.

காலையில் குளித்தபிறகு தூய்மையான ஆடையைத்தான் அணிவேன்.

இன்றைக்கு எந்த உடையை அணிய வேண்டும்?

அம்மா என்னுடைய சட்டையைக் காணவில்லை. அது எங்கே இருக்கிறது?

விளையாடும்போது என் சட்டை கிழிந்துவிட்டது. தைத்துக் கொடுங்கள்.

இந்தச் சட்டையின் பொத்தான் அறுந்து, கீழே விழுந்துவிட்டது.

எல்லாத் துணியையும் துவைக்கப் போடட்டுமா?

காயப் போட்ட துணியெல்லாம் மழையில் நனைந்து விட்டன.

வெயில் அடிக்கும்போதே துணிகளைக் கொடியில் மாட்டி உலர்த்து.

துவைத்து உலர்த்திய துணிகளெல்லாம் காய்ந்து விட்டன. எடுத்து வரவா?

காய்ந்த துணிகளையெல்லாம் எடுத்துவந்து ஒழுங்காக மடித்து வை.

ஆடை அழுக்காக இருக்கிறது. வேறு உடையைப் போட்டுக்கொள்ளட்டுமா?

வெயில் காலத்தில் அணிய மெல்லிய, காற்றோட்டமான உடை தான் சிறந்தது.

கோயிலுக்குப் போகும்போது வேட்டி, சட்டை, புடவை, இரவிக்கை தான் அணிய வேண்டும்.

# வீடு

நாம் உணவு சமைக்கவும், சாப்பிடவும், இளைப்பாறவும், உறங்கவும் நமக்குப் பாதுகாப்பாக இருக்கின்ற ஒரு இடத்தை வீடு என்று அழைக்கிறோம்.

சமையலறை, படுக்கையறை, குளியலறை, கழிவறை, வரவேற்புக் கூடம், சாப்பாட்டு அறை, படிப்பு அறை, பூசை அறை, விருந்தினர் அறை, என்று பல அறைகளும் சில வீடுகளில் இருக்கும்.

அம்மா, அப்பா, தாத்தா, பாட்டி, மனைவி மக்களுடன் மகிழ்வுடன் சேர்ந்து வாழ்வதற்குச் சிறந்த இடம் வீடு ஆகும்.

## கோடிட்ட இடத்தை நிரப்புக:

எங்கள் வீடு ஓர் __________ வீடு. (அழகான)

எங்கள் வீட்டில் பல __________ இருக்கின்றன. (அறைகள்)

நாங்கள் __________ மேசையில் சாப்பிடுவோம். (உணவு)

என் அம்மா நன்றாக __________. (சமைப்பார்)

தங்கையும் நானும் __________ அறையில் படிப்போம். (புத்தக)

இரவில் நான் தூங்கும் இடத்தின் பெயர் __________. (படுக்கையறை)

## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1. வீடு எதற்குச் சிறந்த இடம்?

2. எந்த இடத்தை வீடு என்று அழைக்கிறோம்?

3. வீட்டில் இருக்கும் அறைகளின் பெயர்கள் என்ன?

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:



சுவர்



குடிசை வீடு



ஓட்டு வீடு



வேலி



அடுக்கு மாடி வீடு



மாடி வீடு



விளக்குமாறு



துடைப்பம்



கைப்பிடி



பூட்டு சாவி



சன்னல்



கதவு

## எதிர்ச்சொல்

அமர்ந்து x எழுந்து

அமைதி x இரைச்சல்

அருகில் x தொலைவில்

அழகு x அசிங்கம்

அறிவாளி x முட்டாள்

இல்லை x ஆம்

இல்லை x உண்டு

இன்பம் x துன்பம்

ஈரமான x காய்ந்த

உண்மை x பொய்மை

உயர்வு x தாழ்வு

உயர்வு x தாழ்வு

நண்பர் x பகைவர்

நல்ல x கெட்ட

நன்மை x தீமை

மறதி x நினைவு

கொடு x எடு

## எண்களை எழுத்தால் எழுது. (41-70)

| | | |
|---|---|---|
| 43 | 55 | 48 |
| 51 | 66 | 53 |
| 60 | 49 | 64 |
| 68 | 52 | 42 |
| 58 | 65 | 59 |
| 47 | 41 | 61 |
| 70 | 63 | 50 |
| 62 | 69 | 67 |
| 54 | 57 | 56 |
| 46 | 44 | 45 |




எங்கள் வீட்டின் பின்புறம் பெரிய தோட்டம் இருக்கிறது. தோட்டத்தில் நிறைய பழமரங்கள் உள்ளன.

நாங்கள் பூச்செடிகளை நட்டு வளர்க்கிறோம். அந்தச் செடிகளில் பல வண்ணங்களில் பூக்கள் பூக்கின்றன.

வீட்டைச்சுற்றி வேலி இருக்கிறது. அந்த வேலிதான் தோட்டத்தைப் பாது காக்கிறது. மரப்பலகைகளால் வேலி செய்யப்பட்டுள்ளது. வேலியின் நிறம் செம்மஞ்சள்.

எங்கள் வீட்டு வேலிக்கு வெளியே ஒரு தெரு இருக்கிறது. தெருவிற்கு அடுத்தப் பக்கத்தில் இரண்டு வீடுகள் இருக்கின்றன. அங்கே உள்ள ஒரு வீட்டின் வேலியும், ஓடுகளும் நீல நிறத்தில் உள்ளன.

இன்னுமோர் எதிர் வீட்டின் ஓடுகள் செம்மஞ்சள் நிறத்தில் இருக்கின்றன. வானமும்கூட நீல நிறத்தில்தான் இருக்கிறது.

நீல ஓடுகள் உள்ள வீட்டின் சுவருடைய நிறம் வெள்ளை.

அந்த வீட்டின் கூரையில் ஒரு புகை போக்கி இருக்கிறது. அந்தப் புகைப்போக்கி, சமையல் செய்யும் போது வெளியாகும் புகையை வீட்டிற்கு வெளியே அனுப்பிவிடப் பயன்படுகிறது.

எங்கள் வீட்டின் ஒரு பக்கத்தில் வைக்கோல் போரைக் குவித்து வைத்திருக்கிறோம்.

தோட்டத்திற்குள் ஒரு மின்சாரக் கம்பம் இருக்கிறது. மின்சாரக் கம்பத்தில் பறவை கூடு ஒன்று உள்ளது. அப்பா அந்தப் பறவைக் கூட்டைச் செய்து கம்பத்தில் கட்டி வைத்தார். பறவைகள் அங்கு வந்து முட்டையிடும்.

நாங்கள் சில கோழிகளையும், ஓர் ஆட்டையும் வளர்க்கிறோம். அந்த ஆடு கம்பத்திற்குப் பக்கத்தில் நிற்கிறது.

தோட்டத்தில் புற்கள் முளைத்துள்ளன. புற்களை ஆடு மேய்ந்து கொண்டிருக்கும். கோழிகளும் புற்களைக் கொத்திக்கொத்தித் தின்றுகொண்டு இருக்கும், வாரத்திற்கு ஒரு முறை எஞ்சிய புற்களை அப்பா வெட்டுவார்.

மண்வெட்டியால் நிலத்தைக் கொத்தியும், கிளறியும் பாத்திகள் கட்டி இருக்கிறோம். அந்தப் பாத்திகளில் காய்கறிச் செடிகளைப் பயிரிடப்போகிறோம்.

செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றத் தண்ணீர் வாளி ஒன்று வைத்திருக்கிறோம்.

எங்கள் வீட்டுத் தோட்டத்தில் பூக்கள் பூத்து இருக்கின்றன. நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்குகின்றன. எங்கள் வீட்டுக்கு வாருங்கள் எல்லோரும் சாப்பிடலாம்.

### எதிர்ச்சொல்

| | | |
|---|---|---|
| கேள்வி | x | பதில் |
| சரி | x | தவறு |
| இங்கே | x | அங்கே |
| இடது | x | வலது |
| மேலே | x | கீழே |
| முன்னால் | x | பின்னால் |
| எளிய | x | அரிய |
| ஏறி | x | இறக்கி |
| பிரிந்து | x | சேர்ந்து |
| புதிய | x | பழைய |
| பெரிது | x | சிறிது |
| முடியும் | x | முடியாது |
| முதல் | x | இறுதி |
| பழம் | x | காய் |
| பின் | x | முன் |
| பின்புறம் | x | முன்புறம் |
| உள்ளே | x | வெளியே |
| பக்கம் | x | தூரம் |

### சொற்களஞ்சியம்

தோட்டம், வேலி, மரப்பலகை, தெரு, ஓடு, புகை, புகைப்போக்கி, வைக்கோல் போர், பறவைக்கூடு, கோழி, முட்டை, காய்கறி, பாத்தி, பயிரிடு, ஆடு, வாளி.

### ஆசிரியர் கவனத்திற்கு:

இந்தப்படத்தை பார்த்து தெளிவாக விளக்கத் தெரிய வேண்டும். எனவே, இந்தப் பாடத்திலுள்ள ஒவ்வொரு வரியையும் படத்துடன் ஒப்பிட்டுச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

### வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1 தோட்டத்தில் வாளி எதற்காகப் பயன்படுகிறது?

2. வீட்டிற்கு புகைப்போக்கி எதற்காகத் தேவைப்படுகிறது?

3. நிலத்தில் எப்படி பாத்தி கட்டுவார்கள்?

4. பறவைக் கூடு எங்கே இருக்கிறது?

5. தோட்டத்தில் எத்தனைக் கோழிகள் இருக்கின்றன?

வாசித்துப்பழகு
எழுதிப்பழகு:

1. தாயிற் சிறந்த கோவிலுமில்லை.

2. தந்தை சொல் மிக்க மந்திரமில்லை.

3. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

4. எழுத்தறிவித்தவன் இறைவனாகும்.

## உறவினர்கள்

| | |
|---|---|
| அம்மா | - அப்பா |
| தாய் | - தந்தை |
| அன்னை | - பிதா |
| சின்னம்மா | - சித்தப்பா |
| சித்தி | - சித்தப்பா |
| பெரியம்மா | - பெரியப்பா |
| ஆச்சி | - தாத்தா |
| பாட்டி | - பாட்டன் |
| சகோதரி | - சகோதரன் |
| அக்கா | - அண்ணன் |
| அண்ணி | - அண்ணன் |
| தங்கை | - தம்பி |
| மகள் | - மகன் |
| புதல்வி | - புதல்வன் |
| புத்திரி | - புத்திரன் |
| மருமகள் | - மருமகன் |
| மாமி | - மாமா |
| அத்தை | - தாய்மாமன் |
| பேத்தி | - பேரன் |
| மைத்துனி | - மைத்துனன் |
| மச்சாள் | - மச்சான் |
| மனைவி | - கணவன் |

நானும், என் தம்பி, தங்கை, அக்கா, அண்ணன், அம்மா, அப்பா ஆகிய எல்லோரும் ஊருக்குச் சென்றோம்.

ஊரில் அத்தையும் மாமாவும் வசிக்கிறார்கள். அவர்களுடன் தாத்தாவும், பாட்டியும், சித்தியும் இருக்கிறார்கள். மாமா வீட்டிற்குப் பக்கத்தில் பெரியம்மா வீடு இருக்கிறது.

ஊரில் பெரியம்மாவும், பெரியப்பாவும் எங்களைக் கடைக்கு அழைத்துச் சென்றார்கள். மாமா எனக்கு பொம்மை வாங்கித்தந்தார்.

அக்காவுக்கு தாவணி, இரவிக்கையும், தம்பிக்கு குல்லாவும், கம்பளிச் சட்டையும் கிடைத்தது. அம்மா வாங்கியப் புடவை அழகாக இருந்தது. தாத்தாவும், பாட்டியும் எனக்கு கதை சொன்னார்கள்.

## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1. யாரெல்லாம் ஊருக்குச் சென்றார்கள்?

2. அக்காவும், அம்மாவும் எந்தெந்தத் துணிகளை வாங்கினார்கள்?

3. பொம்மை யாருக்குக் கிடைத்தது?

4. ஊரில் யாரெல்லாம் வசிக்கிறார்கள்?

## வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

அத்தை, நாம் எப்போது கடைக்குப் போவோம்?

மாமா, நானும் உங்களுடன் கடைக்கு வருகிறேன்.

சித்தி, எனக்கு ஒரு கதைப் புத்தகம் வாங்கிக் கொடுங்கள்.

அண்ணா! பாட்டிக்கு ரொட்டி வாங்கித் தர வேண்டும்.

வணக்கம் சித்தப்பா. வீட்டில் சித்தி நலமாக இருக்கிறார்களா?

சின்னம்மா, நீங்க சமைத்த சாப்பாடு ருசியாக இருக்கிறது.

ஆச்சி, எனக்கு ஒரு கதை சொல்லுங்கள்.

தம்பி புத்தகத்தையெல்லாம் கலைத்துப் போடாதே.

அப்பா எனக்குத் தமிழ்ப் பாடத்தைச் சொல்லிக் கொடுங்கள்.

அம்மா நான் வீட்டுப்பாடத்தை எழுதி முடித்துவிட்டேன்.

பெரியம்மா எனக்கு ஒரு தமிழ்ப் பாட்டு சொல்லிக் கொடுத்தார்.

பாட்டி, தாத்தா சொல்லைக் கேட்டு நடப்பேன்.

வீட்டுக்கு வந்த உறவினர்களை அன்பாக வரவேற்பேன்.

### ஆசிரியர் கவனத்திற்கு:

உறவினர்களுடன் சேர்ந்து வாழும்போதும், விருந்தினர்கள் வீட்டிற்கு வரும்போதும் நடக்கின்ற மகிழ்ச்சியான நிகழ்வுகளை மாணவர்களுக்கு விளக்கவேண்டும். தாய் மாமன் உறவின் சிறப்பையும், உரிமையையும், கடமையையும் சுவையாகச் சொல்லவேண்டும்.

உதாரணம்: தாய் மாமன் மடியில் உட்காரவைத்துக் காதுகுத்தல், மொட்டையடித்தல் போன்ற சம்பவங்களில் மாமன் செய்யவேண்டிய சீர் வரிசைகள் போன்றவற்றை விளக்கலாம்.

# பனைமரம்

நீண்டு வளர்ந்த நெடுமரமே
ஏன் வளர்ந்தாய் நெடுமரமே?

நான் வளர்ந்த காரணத்த
நாடறியக் கூறுவேன் கேள்

நீரிறைக்கத் துலாமரமாய்
நீண்டு நானும் வளர்ந்திருப்பேன்
வெட்ட நல்ல விறகாவேன்
வீட்டைக் கட்ட மரமாவேன்

அடுக்கடுக்காய் பானைகளை
அடுக்கி வைக்க உரியாவேன்
படுக்க நல்லப் பாயாவேன்
பஞ்சனைக்கு நார் ஆவேன்

பஞ்சம் பசியென்று வந்துவிட்டால்
பதநீரும் நுங்கும் நான் தருவேன்
இன்னும் கொஞ்சம் வேண்டுமென்றால்
கிழங்கும் பழமும் நான் தருவேன்
கருத்தாய் உடல்நலம் காத்திடவே
கற்கண்டும் நான் தருவேன்

புலவர் சொல்லும் பாட்டினையே
பதித்து வைத்தேன் ஏட்டினிலே
ஏடு ஆகி வலம் வந்தேன்
எல்லார் மனதிலும் குடிபுகுந்தேன்

கலைகள் வளர்த்தேன் ஓலையிலே
கற்பித்தேன் கல்விச் சாலையிலே
தனியாய் நிற்க மாட்டாமல்
சுற்றம் சேர்த்தேன் தூற்றாமல்
கனியும் காயும் தவறாமல்
கடமை செய்தேன் பாராமல்

கற்பக மரமென அழைப்பாரே
கருதிய நன்மைகள் பெறுவாரே
பள்ளி மாணவா கதைக் கேளு
பனைமரம் என்பது என்பேரு

## எழுதிப்பழகு
## பேசிப்பழகு

படி, தடி, குடி

கனி, தனி, பனி

மலர், தளர், வளர்

பழம், கிழம், முழம்

வெட்ட, கட்ட, தட்ட

படு, எடு, விடு, நடு

நீர், பார், தார், நார்

ஏடு, பாடு, வீடு, நாடு

மேயும், பாயும், சாயும்

அடுக்க, படுக்க, எடுக்க

குற்றம், சுற்றம், முற்றம்

பதித்து, குதித்து, மதித்து

வீட்டை, காட்டை, நாட்டை

## வினாவிற்கு ஏற்ற விடையை எழுது:

1. பனைமரத்தை எப்படி அழைப்பார்கள்?

2. துலாமரம் எதற்குப் பயன்படும்?

3. ஓலைச்சுவடி எதிலிருந்து கிடைக்கிறது?

4. நாம் உண்பதற்கு பனைமரம் என்ன தருகிறது?

### பேசிப்பழகு

| | | |
|---|---|---|
| படி | நான் பாடத்தைப் படித்தேன் | அவள் படித்தாள் |
| பாடு | அவன் பாட்டைப் பாடினான் | நீ பாடினாய் |
| குடி | இவன் பதநீரைக் குடித்தான் | இவர் குடித்தார் |
| கனி | அவர் மரத்தில் ஏறி கனியைப் பறித்தார் | அவர் பறித்தார் |
| பனி | மாடு காலையில் பனியில் நனைந்தது | மாடு நனைந்தது |
| மேயும் | ஆடுகளும் மாடுகளும் புற்களை மேயும் | ஆடுகளும் மேயும் |
| மலர் | செடியில் மலர் மலர்ந்து இருந்தது | செடியில் இருந்தது |
| வெட்ட | புற்களை வெட்ட வெட்ட அது வளரும் | புற்கள் வளரும் |
| நீர் | கடல் நீர் உப்புக் கரிக்கும் | கடல்நீர் கரிக்கும் |
| குற்றம் | குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை | குற்றம் இல்லை |
| குதித்து | நாங்கள் குதித்து விளையாடினோம் | நான் குதித்தேன் |
| வீட்டை | அப்பா வீட்டைக் கட்டினார் | அப்பா கட்டினார் |
| காட்டை | காட்டை அழிக்கக் கூடாது | அழிக்கக் கூடாது |
| நாட்டை | நாட்டைக் காப்பாற்ற வேண்டும் | காப்பாற்ற வேண்டும் |

**ஆசிரியர் கவனத்திற்கு:**

சங்க காலம் முதல், தமிழரின் வாழ்வில் பனைமரம் ஒரு அங்கமாகவே இருந்துள்ளது. பனைமரத்தைப் பற்றிய எல்லா குறிப்புகளையும் மாணவர்களுக்குத் தெளிவாகக் கற்பிக்கவேண்டும். இந்தப் பாடத்தில் இடம்பெற்றுள்ளச் சொற்களைக் கொண்டு வெவ்வேறு வாக்கியங்களை அமைத்துப் பேசப் பயிற்சி கொடுக்க வேண்டும். வீட்டுப் பாடம் அவசியம். அதை மீண்டும் நினைவூட்டல் மிகவும் அவசியம். எழுதவும் படிக்கவும் பயிற்சியளிக்கவேண்டும்.

# பழமொழியும் பண்பாடும்



ஆலமர விழுதுகள்

**ஆலும் வேலும் பல்லுக்குறுதி**
**நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி**



வேப்பமரக் குச்சிகள்

ஆலும், வேலும் என்பன ஆலமரத்தின் விழுதுகளையும், வேப்பமரத்தின் குச்சிகளையும் குறிக்கின்றன.

ஆலமரத்தின் விழுதுகளைக் கொண்டு பற்களைத் துலக்கினால் பற்கள் உறுதியாகஇருக்கும்.அதைப்போல வேம்பு என்று அழைக்கப்படுகிற வேப்பமரக் குச்சிகளைக் கொண்டு பற்களைத் துலக்கினாலும் பற்கள் உறுதியாக இருக்கும். கிராமத்தில் மக்கள் ஆலமரத்தின் விழுதுகளையும், வேப்பமரக்குச்சிகளையும் பற்களைத்-துலக்கப் பயன்படுத்துகிறார்கள்.

நாலு என்பது நாலடியாரையும் இரண்டு என்பது திருக்குறளையும் குறிக்கின்றன.

நாலடியார் ஒரு நீதி நூல். நானூறு சமண முனிவர்களால் எழுதப்பட்டது. ஒவ்வொருப் பாடலும் நான்கு அடிகளைக் கொண்டது. திருக்குறள் இரண்டு அடிகளைக் கொண்டது. திருக்குறளை எழுதியவர் திருவள்ளுவர்.

பல்லுக்குறுதி – பல்லுக்கு உறுதி
சொல்லுகுறுதி – சொல்லுக்கு உறுதி
ஆல் - ஆலமரம், வேம்பு - வேப்பமரம்



## எதிர்ச்சொல்

| | | |
|---|---|---|
| சில | x | பல |
| ஒன்று | x | பல |
| ஒருமை | x | பன்மை |
| ஒற்றுமை | x | வேற்றுமை |
| சிறிய | x | பெரிய |
| சிறியவர் | x | பெரியவர் |
| சிறுவன் | x | சிறுமி |



ஆலமரத்தின் கிளைகளில் இருந்து வேர்கள் தோன்றி வளர்ந்து மண்ணில் ஊன்றுகின்றன. அவை விழுதுகள் என அழைக்கப்படுகின்றன.

ஆலமரத்தின் கிளைகளை இந்த விழுதுகள் தான் தாங்கி நிற்கின்றன. ஆலமரத்தின் பழத்தைப் பறவைகள் விரும்பி உண்ணும். இந்தியாவின் தேசியமரம் ஆலமரமாகும்.

வேப்பமரம் கசப்பு சுவையுடையது. வேப்பம்பூவில் இரசம் வைத்தும், பச்சடி செய்தும் சாப்பிட்டால் உடலுக்கு நல்லது.

வேப்ப மரத்தின் இலை, பூ, காய், பழம், கொட்டை(விதை), எண்ணெய், மரப்பட்டை, கிளை ஆகிய எல்லா விதமான பாகங்களுமே வைத்திய முறைக்கு நன்கு பயன்படுகின்றன.

## வினாச்சொற்களுக்கு ஏற்ப கேள்வி வாக்கியம் அமை:

1. ஆலும் வேலும் என்பன எவற்றைக் குறிக்கின்றன?

2. நாலும், இரண்டும் என்பன எவற்றைக் குறிக்கின்றன?

3. நாலடியாரை எழுதியவர்கள் யாவர்?

4. திருவள்ளுவர் எழுதிய நூலின் பெயர் என்ன?

5. விழுதுகள் என்று எதற்குப் பெயர்?

6. வேப்பம்பூவை எப்படி சாப்பிடலாம்?

6. வேப்பமரத்தின் எந்த பாகம் வைத்திய முறைக்குப் பயன்படுகிறது?

## மரபுச் சொல்லை நினைவில் கொள்

வாசித்துப்பழகு
எழுதிப்பழகு:

எறும்புகள் சாரை சாரையாய் ஊர்ந்து செல்லும்.



யானைகள் கூட்டம் கூட்டமாக வாழும்.



திராட்சை குலை குலையாகத் தொங்கும்.



ஆடுகள் மந்தை மந்தையாக மேயும்.



கற்கள் குவியல் குவியலாக கிடக்கும்.



## கதைக் கதையாம்

பாரம்பரியப் பாடல்



கதைக் கதையாம் காரணமாம்
காரணத்திலே ஒரு தோரணமாம்
தோரணத்திலே ஒரு மழை பெஞ்சுதாம்
மழையிலே ஒரு புல்லு மொளஞ்சுதாம்
புல்லைக்கொண்டு மாட்டுக்குப் போட்டேன்
மாடு கொஞ்சம் பால் தந்தது
பாலைக் கொண்டு பாட்டிக்கு கொடுத்தேன்
பாட்டி ஒரு காசு கொடுத்தாள்
காசைக் கொண்டு கடையில கொடுத்தேன்
கடைக்காரன் ஒரு பூ கொடுத்தான்
பூவைக் கொண்டு புள்ளையாருக்குப் போட்டேன்
புள்ளையார் ஒரு தேங்காய் கொடுத்தார்
தேங்காயை உடைக்க கல்லுக்குப் போனேன்
கல்லெல்லாம் காக்கா பீ
கறையைக் கழுவ தண்ணிக்குப் போனேன்
தண்ணியெல்லாம் மீனு
மீனைப் புடிக்க வலைக்குப் போனேன்
வலையெல்லாம் ஓட்டை
ஓட்டையைத் தைக்க ஊசிக்குப் போனேன்
ஊசியும் நானும் உருண்டோடி வந்தோம்.



## படத்தைப் பார்த்து பெயரை எழுது:





















## சொல்லும் பொருளும் அறிக:



| பேச்சுவழக்கு | சரியானப் பதம் |
|---|---|
| காக்கா பீ | காகத்தின் எச்சம். |
| புல்லு மொளஞ்சுதாம் | புல் முளைத்ததாம். |
| மாட்டுக்குப் போட்டேன் | மாடு தின்னக் கொடுத்தேன். |
| கல்லுக்குப் போனேன் | கல்லைத்தேடிப் போனேன். |
| தண்ணிக்குப் போனேன் | தண்ணீரைத் தேடிப் போனேன். |
| வலைக்குப் போனேன் | வலையைத்தேடிப் போனேன். |
| ஊசிக்குப் போனேன் | ஊசியைத் தேடிப் போனேன். |

## எதிர்ச்சொல்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முன் | x | பின் | பகல் | x | இரவு |
| வா | x | போ | ஒளி | x | இருள் |
| எழு | x | அமர் | காலை | x | மாலை |
| சிலர் | x | சிலர் | கிழக்கு | x | மேற்கு |
| எடு | x | கொடு | வடக்கு | x | தெற்கு |
| திற | x | மூடு | நேற்று | x | நாளை |

## ஆசிரியர் கவனத்திற்கு:

மிகப் பழமையானப் பாரம்பரியப் பாடல் இது. மாணவர்கள் குழுவாக நின்று ஒவ்வொரு மாணவரும் ஒவ்வொரு வரியைப் பாடவேண்டும்.

பாடலில் வருகின்ற ஒவ்வொரு சொல்லையும் விளக்கிப் பொருள் சொல்ல வேண்டும். பாடவும், பேசவும், எழுதவும் பயிற்சி பெற வேண்டும்.

# மலைவாழைக்கல்வி

தலைவாரிப் பூச்சூடி உன்னைப் பாட
சாலைக்குப் போ என்று சொன்னாள் உன் அன்னை
சிலைபோல ஏனங்கு நின்றாய் - நீ
சிந்தாத கண்ணீரை ஏன் சிந்துகின்றாய்

விலைபோட்டு வாங்கவா முடியும்? - கல்வி
வேளைதோறும் கற்று வருவதால் படியும்!
மலைவாழை அல்லவோ கல்வி? - நீ
வாயார உண்ணுவாய் போ என் புதல்வி!

படியாத பெண்ணாய் இருந்தால், - கேலி
பண்ணுவார் என்னை இவ்வூரார் தெரிந்தால்!
கடிகாரம் ஓடுமுன் ஓடு! - என்
கண்ணல்ல, அண்டை வீட்டுப் பெண்களோடு!



*புரட்சிக்கவி பாரதிதாசன்*

ஒரு அம்மா தன்னுடைய மகளின் தலைமுடியை வாரி பின்னலிட்டாள். பின்னலில் பூக்களைச் சூடினாள். பிறகு அவளைப் பள்ளிக்குப் போகச் சொன்னாள்.

மகள் பள்ளிக்குச் செல்லாமல் கற்சிலை போல அசையாமல் நின்று கண்ணீர் விட்டாள்.

'காசு கொடுத்துக் கல்வியை விலைக்கு வாங்க முடியாது. ஒவ்வொரு வேளையும் தொடர்ந்து படிக்கப் படிக்கத்தான் மனதில் படியும்.

ஒரு பெண் ஒழுங்காகப் படிக்காமல் இருந்தால் அவளுடைய தாயாரைத்தான் மற்றவர்கள் கேலி செய்வார்கள்.

சுவையான மலை வாழைப்பழம் உடலுக்குச் சக்தியை வழங்கும். அதுபோலக் கல்விதான் உன் வாழ்க்கைக்குச் சக்தியைக் கொடுக்கும்.

நேரமாகிவிட்டது.

எனவே அருகில் இருக்கின்ற வீடுகளிலிருந்து பள்ளிக்குச் செல்லும் பெண்களோடு சேர்ந்து நீயும் பள்ளிக்கு விரைந்து செல் என்றாள் அந்த அம்மா.

போ ______

சூடு ______

சிந்து ______

நில் ______

வாங்கு ______

படி ______

உண் ______

பண்ணு ______

ஓடு ______

1. ஊரார் ஏன் கேலி செய்வார்? எப்படி கேலி செய்வார்கள்?

2. அம்மா தன் மகளை எவ்வாறு பள்ளிக்கு அனுப்பினாள்?

3. கல்வி எப்போது மனதில் படியும்?

4. இந்தப் பாட்டின் மூலம் நீ என்ன தெரிந்துகொண்டாய்?

## உலக நீதி – உ

நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம்
நிலையில்லாக் காரியத்தை நிறுத்த வேண்டாம்
நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்
நல்லிணக்கம் இல்லாரோடு இணங்க வேண்டாம்
அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்
அடுத்தவரை ஒரு நாளும் கெடுக்க வேண்டாம்

*உலகநாதர்*

வாசித்துப்பழகு – எழுதிப்பழகு:

மனதுக்குத் தெரிந்து பொய்யை சொல்லாதே.

உறுதியில்லாத காரியத்தை நிலைநிறுத்த முயலாதே.

நஞ்சையுடைய பாம்பு போன்றவர்களுடன் ஒரு பொழுதும் பழகாதே.

நல்லவர்களுடைய நட்பு இல்லாதவர்களுடன் பழகாதே.

தனியாக ஒருவரும் இல்லாத வழியில் பயமில்லாமல் செல்லாதே.

உன்னிடத்து வந்து சேர்ந்தவரை ஒருபொழுதும் கெடுக்காதே.

# உலகப் பொது மறை



திருக்குறள் உலகப்புகழ் பெற்ற தமிழ் இலக்கிய நூலாகும்.

இது இல்லற வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும் இசைவுடன் வாழத்தேவையான நெறிகளை விளக்குகிறது. இதனை எழுதியவர் திருவள்ளுவர். சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட இந்நூலில் 1330 குறள்கள் உள்ளன. இவை ஒரு அதிகாரத்திற்கு 10 குறள்கள் வீதம் 133 அதிகாரங்களில் தொகுக்கப்பட்டுள்ளன.

இவையனைத்தும் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பிரிவுகளில் எழுதப்பட்டுள்ளது.

இவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று அழைக்கப்படுகின்றன.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

எழுத்துக்கள் எல்லாம் அ என்ற அகரத்தை அடிப்படையாக கொண்டிருக்கின்றன. அதுபோல உலகம் முழுமுதற்கடவுளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

மக்கள் ஒன்றுபட்டு இன்பமாக வாழ்வதற்கு திருக்குறள் வழி கூறுகிறது. அது மத, இன, மொழி சார்பற்று உலகில் வாழும் எல்லா மக்களுக்கும் பொதுவானதாக இருக்கிறது.

ஆகையால் எல்லோரும் திருக்குறளை உலகப்பொதுமறை என்று கூறுகிறார்கள்.

உண்மையை எடுத்து உரைப்பதால் பொய்யாமொழி என்றும், மூன்று பால்களையும் கொண்டிருப்பதால் முப்பால் என்றும் அழைப்பார்கள்.

நாம் அனைவரும் திருக்குறள் காட்டும் வழியில் நடப்போம்.

**அருஞ்சொற்பொருள்:**

ஆதி : மூலம், முதல், தொடக்கம், மூத்த, அடிப்படை.

பகவன்: பகுத்தவன், படைத்தவன், இறைவன், முதல்வன், தலைவன், கடவுள்.

ஆதிபகவன் : மூலமுதல்வன்.

## வினாவிற்கு ஏற்ற விடை எழுது:

1. திருக்குறளில் எத்தனைக் குறள்கள் உள்ளன?

2. திருக்குறளை எழுதியவர் யார்?

3. திருக்குறளில் எத்தனை அதிகாரங்கள் உள்ளன?

4. திருக்குறளை எப்படியெல்லாம் அழைப்பார்கள்?

5. திருக்குறளை உலகப்பொதுமறை என்று அழைக்கக் காரணம் என்ன?

## எண்களை எழுத்தால் எழுது. (71-100)

| | | |
|---|---|---|
| 75 | 81 | 88 |
| 80 | 76 | 100 |
| 91 | 97 | 74 |
| 89 | 92 | 96 |
| 77 | 86 | 83 |
| 99 | 72 | 98 |
| 94 | 95 | 78 |
| 87 | 90 | 93 |
| 73 | 82 | 85 |
| 84 | 79 | 71 |

ஆசிரியர் கவனத்திற்கு:
பேசவும் எழுதவும் வேண்டும்..



திருக்குறளைப் பற்றி எல்லா மாணவர்களும் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். அடுத்தடுத்தப் பாடங்களில் வருகின்ற குறளைப் பயிலும்போதும் இந்தப் பாடத்தில் உள்ள கேள்விகளையும் மீண்டும் கேட்கலாம்.



ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா
களி படைத்த மொழியினாய் வா வா வா
கடுமை கொண்ட தோளினாய் வா வா வா
தெளிவு பெற்ற மதியினாய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண்டு இரங்குவாய் வா வா வா
ஏறு போல் நடையினாய் வா வா வா

வெள்ளம்போல் தமிழர் கூட்டம்
வீரங்கொள் கூட்டம் அன்னார்
உள்ளத்தால் ஒருவரே மற்று
உடலினால் பலராய்க் காண்பார்
கள்ளத்தால் நெருங்கொணாதே
என வையம் கலங்கக்கண்டு
துள்ளும்நாள் எந்நாள்? உள்ளம்
சொக்கும் நாள் எந்தநாளோ?



